4 பக்கங்கள் காசுகள 15

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 21—8—73 செவ்வாய் (மலர் 195

## வட இந்தியாவில் கடும் வெள்ளம்

ஜெய்ப்பூர், ஆக. 19—

ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், உத்திரப் பிரதேசம் ஆகிய 3 மாநிலங்களும் கடுமையான வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ளன. டில்லியிலிருந்து ஆமதாபாத்திற்குச் சென்ற ரயில் வெள்ளத்தால் சூழப்பட்டது. அதில் உள்ள 1000பிரயாணிகளுக்கும், தாழ்வான பகுதிகளில் உள்ள மக்களுக்கும் ஹெலிகாப்டர் மூலம் உணவுப் பொட்டலங்கள் போடப்படுகின்றன.

## சிறுவாணி நதி ஒப்பந்தம்

கோவை, ஆக. 19—

சிறுவாணி நதி நீரைப் பகிர்ந்து கொள்வது சம்பந்தமாக கேரள அரசுக்கும் தமிழக அரசுக்கும் உடன்பாடு ஏற்பட்டுள்ளது. இவ்வொப்பந்தப்படி கோவை நகருக்கு குடிநீர் வசதி ஏற்படவிருக்கிறது.

# வேலை நிறுத்தங்கள் தோன்றுவது ஏன்?

## ஜனதிபதி கிரிக்கு ராமமூர்த்தி பதில்

### உற்பத்தியைப் பெருக்கியதால் தொழிலாளர் கண்ட பலன் என்ன?



பம்பாய், ஆக 19-

நாட்டில் வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள், பந்த் ஆகியவை நடைபெறுவதற்கு அரசாங்கமும் தொழிலாளர்களுமே பொறுப்பு என்று சி. ஐ. டி. யூ. பொதுச் செயலாளர் தோழர் பி. ராமமூர்த்தி குற்றம் சாட்டினர்.

**நாட்டில் தற்போது தோன்றியுள்ள கஷ்ட நிலைமையைச் சமாளிப்பதற்கு அடுத்த மூன்று ஆண்டுகளுக்கு வேலை நிறுத்தங்களுக்கும் கதவடைப்புகளுக்கும் தடை விதிக்க வேண்டும் என்று சுதந்திர தினச் செய்தியில் ஜனதிபதி கிரியும் பிரதம மந்திரி இந்திராகாந்தியும் வற்புறுத்தியதற்கு தோழர் பி. ராமமூர்த்தி பதிலளித்துள்ளார்.**

தங்கள் கோரிக்கைகளை அடைய தொழிலாளர்கள் வேறுவழியிலலாமற் போய், கடைசி ஆயுதமாகவே வேலை நிறுத்தத்தில் இறங்குவதையு தோழா ராமமூர்த்தி தன்டைய பதிலில் சுட்டிக் காட்டியுள்ளார்.

தங்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்த பம்பாய் பஞ்சாலைத் தொழிலாளர்கள் கடந்த புதனன்று நடத்திய பஞ்சாலைத்தொழிலாளர்கள் மாநாட்டில் தோழர் ராமமூர்த்தி பேசினர்.

சி ஐ. டி. யூ. தலைமையிலுள்ள பஞ்சாலைத்தொழிலாளர்கள் சங்கமும் மால் மஸ்தூர் யூனியனும் கூட்டாக நடத்திய இம்மாநாட்டில் 2000 பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள்.

#### உற்பத்தி பெருகியது கிடைத்ததென்ன?

தோழர் ராமமூர்த்தி தோடாங்கு இம்மாநாட்டில் வபசுகையில் குறிப்பிட்டதாவது:—

'உற்பத்தி செய் அல்லது அழிந்து போ' என்று காங்கிரஸ் எழுப்பிய கோஷத்தைத் தொழிலாளர்கள ஏற்றுகொண்டார்கள். சுதந்திரம் பெற்றதிலிருந்து எல்லா துறைகளிலும தொழிலாளர்கள உற்பத்தியைப் பெருக்கினர்கள். அதனல் இதனல் பலடைந்தவர்கள் யார்? அரசாங்கத்தில் இருப்பவர்களும் முதலாளிகளும தான் இதனல் பயனடைந்தார்கள்.

#### கஷ்டத்துக்கு மேல் கஷ்டம்

பற்றுகுறை, பண வீக்கம், கறுப்புப் பணம் ஆகியவற்றினல் தொழிலாளர்கள் பெரும் கஷ்டத்திற்கு உள்ளாகியிருக்கிருர்கள். உற்பத்தியைப் பெருக்கியும் அதனல் எந்தப் பலனையும் அடையாமல் தொழிலாளர்கள் செத்துமடிந்து கொண்டிருக்கிருர்கள்.

இந்த நிலைமையைப் பார்த்துக்கொண்டு தொழிலாளர்கள் இன்னமும் சும்மா இருக்க முடியாது.

ஊதியம் அன்றுடத் தேவைகள் ஆகியவற்றில் குறைந்தபட்சத் தேவை பூர்த்திசெய்யப்படாதவரை, தொழிலாளர்கள் பந்த், வேலை நிறுத்தம் ஆகியவற்றில் இறங்கியே தீருவார்கள் என்று ராமமூர்த்தி எச்சரித்தார்.

#### எஸ். ஏ. டாங்கே பேச்சு

இந்தக் கூட்டத்தில்பேசிய ஏ ஐ டி யூ சி பொதுச் செயலாளர் எஸ் ஏ டாங்கே, வேலை நிறுத்தத்துக்கு தடை விதிக்க தொழிலாளர்கள் இணங்க வேண்டும் என்று ஜனதிபதியும், பிரதம மந்திரியும் கூறியுள்ளார்கள் என்றும், ஆனல் இந்த அரசாங்கத்துக்குப் புரியும் பாஷை வேலை நிறுத்தமன்றிவேறல்ல என்றும் கூறினர்.

#### கோரிக்கைகள்

மாநாட்டில் 13 அம்சக் கோரிக்கைகள் அடங்கிய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஒரு மில் தொழிலாளிக்கு குறைந்த பட்சச் சம்பளம் வாழ்க்கைச் செலவுப்புள்ளி 900 ஆக இருக்கும் நிலையில் மாதம் ரூ 425 கொடுக்க வேண்டும் என்றும், வாழ்க்கைச் செலவு அதிகரிப்பைச் சரிக்கட்டும் முறையில் கிராக்கிப்படி தரவேண்டும் என்றும் அத்தீர்மானம் வற்புறுத்துகிறது.'

1972-ம் ஆண்டுக்கு குறைந்தபட்ச போனசை 20 சதமானம் ஆக உயர்த்த வேண்டும் என்றும் அது கோருகிறது.

கிராஜுடி விதிகளைத் திருத்தவேண்டும் என்றும், முதல் பத்து ஆண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 21 நாட்கள் ஊதியத்தையும் 20 வருட சேவை முடிந்ததும் வருடத்துக்கு ஒரு மாதச் சம்பளம் வீதமும் கிராஜுடி வழங்க வேண்டும் என்றும் தீர்மானம் கோருகிறது.

---

#### கற்களை அறுக்கும் நெருப்பு

மாஸ்கோ, ஆக 20—

சோவியத் நாட்டைச் சேர்ந்த கஜாக்ஸ்தான் குடியரசு விஞ்ஞானிகள் கட்டுமானப் பொருள்களை அழகாக வெட்டி அறுத்துத் தரும் ஒரு விசித்திரமான "கத்தி" ஒன்றை உருவாக்கியுள்ளனர். மிகவும் திறமை வாய்ந்த இந்தக் கருவிக்கு அவர்கள் "பிளாஸ்மோட்ரான் பிஜி—30" என்று பெயரிட்டுள்ளனர்.

இந்தக் கருவியில் உருவாக்கப்படும் ஒரு மின்சாரக் கதிர் வீச்சு அழுத்தப் பெற்ற காற்றின் மூலம் "ஊதி"த் தள்ளப்படுகிறது. அப்போது அது அயனப் படுத்தப்பட்டு, பிளாஸ்மாவைவெளியிடுகிறது அதாவது பல்லாயிரம் டிகிரி அளவுக்கு வெப்பங் கொண்ட ஒரு நெருப்புப் பிழம்பை வெளியிடுகிறது அந்த நெருப்புப் பிழம்பு இப்போது கட்டிடங்களைக் கட்டப் பயன்பட்டு வரும் எந்தவொரு கட்டுமானப் பொருளையும் விரும்பிய விதத்தில் கண நேரத்தில் அறுத்துத் தந்து விடுகிறது.

---

அரிசிப் போராட்டத்தில்

## குமரி மாவட்ட மக்களுக்கு பொன்னப்பநாடார் துரோகம்

### குமரி மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சி கருத்து

நாகர்கோயில், ஆக. 19—

சட்டசபையில் கருணநிதிக்கும் பொன்னப்பநாடாருக்கும் இடையே ஏற்பட்ட அரிசிப் பிரச்னை பற்றிய ஒப்பந்தம் குறித்து பொன்னப்பநாடார், குமரி மாவட்ட மக்களுக்கு விளக்கம் சொல்லியாக வேண்டுமென்று மார்க்சிஸ்ட் கட்சி குமரி மாவட்டக்குழு கோரியுள்ளது

சென்ற 11-ம் தேதி தோழர் டி பாக்கியதாஸ் (கொசசுமணி) தலைமையில் கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி குமரி மாவட்டக் குழு தீர்மானங்கள் வருமாறு:—

குமரி மாவட்ட மக்களுக்கு நியாய விலையில் தேவைக்கேற்ற அரிசி வழங்ககோரி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, ஸ்தாபனக் காங்கிரஸ், அ.தி.மு.க. ஆகிய சட்சிகள் தலைமையில் போராட்டம் நடத்தி சிறை சென்ற அனைத்து கட்சி ஊழியர்களையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி குமரி மாவட்டக் குழு வாழ்த்துகிறது.

#### பொன்னப்பர் துரோகம்

8-8-73 அன்று தமிழக சட்ட சபையில் முதலமைச்சரும் ஸ்தாபன காங்கிரஸ் சட்டமன்ற தலைவரும் குமரி மாவட்ட மக்களுக்கு அரிசி வழங்குவது பற்றி என்ன ஒப்பந்தம் செய்து கொண்டனர் என்பது பற்றி இது வரையிலும் தெளிவு படுத்தப்படவில்லை. இது போராட்டத்துக்கு இழைத்த துரோகமாகும். ஆகவே சட்டசபையில் செய்யப்பட்ட ஒப்பந்தம் பற்றி குமரி மாவட்ட மக்களிடம் ஸ்தாபன காங்கிரசும் அதன் சட்டமன்றத் தலைவர் திரு பொன்னப்பநாடாரும் விளக்க வேண்டும்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி குமரி மாவட்ட மக்களுக்கு அரிசி வழங்குவதற்காக முன்வைத்த கோரிக்கைகள் அப்படியே உள்ளன.

நியாய விலைக் கடைகள் இன்று குறைக்கபபட்டுள்ளது. ஆகவே மக்களுக்கு ஒரு ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி வழங்கவும்,

300 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக்கடை திறக்கவும் வேண்டும். கொள் முதலை பொறுத்த வரை 2 ஏக்கருக்கு மேல் கொள் முதல் செய்ய வேண்டும்.

நிலமில்லா மக்களுக்கு மாவட்டம் முழுவதும் அரிசி வழங்க வேண்டும் உணவு விடுதிகள், சிற்றுண்டி சாலைகளுக்கு தனியாக அரிசி வழங்க வேண்டும்.

---

மதுரை மீனட்சி மில்லில் 2-வது கட்ட

## வேலைப்பளுதிணிக்க நிர்வாகம் முடிவு

### எதிர்த்துப்போராட செயல்கமிட்டி

மதுரை, ஆக 19—

கருமுத்து தியாகராஜ செட்டியாருக்குச் சொந்தமான மதுரை மீனட்சி மில்லில் 2-வது கட்டமாக அதிக வேலைப்பளுவைத் திணிக்க நிர்வாகம் முயற்சித்து வருவதை எதிர்த்துப் போராட தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளனர். இதற்காக போராட்ட செயல் கமிட்டி ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது.

ஏற்கனவே, கடந்த 1970-ஆம் ஆண்டு ஜூலை 15-ந் தேதியன்று ஐ. என். டி. யூ சி. எச். எம். எஸ். தி மு க, ஆகிய சங்கங்களின் ஒத்துழைப்புடன் வேலைப்பளுவை நிர்வாகம் திணித்தது. இது போதாதென்று மேலும் தொழிலாளர்களைச் சுரண்ட, கருமுத்து நிர்வாகம் இப்பொழுது 2-வது கட்டமாக அதிக வேலைப் பளுவைத் திணிக்க முடிவு செய்துள்ளது.

எனவே, நிர்வாகத்தின் இந்த முடிவு குறித்து ஆலோசிக்க கடந்த 10-ந் தேதியன்று சி ஐ டி யூ, சோசலிஸ்ட் சங்கம், ஏ ஐ டி யூ சி, அ தி மு க, ஆகிய சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது. அதில், ஏற்கனவே உள்ள வேலைப்பளு குறித்தும், அதனல் தொழிலாளர்கள் படும இன்னல்கள் குறித்தும், நிர்வாகம் திணிக்கவிருக்கும் 2-வது கட்ட வேலைப்பளு குறித்தும விவாதிக்கப்பட்டது.

முடிவில் 4 சங்கங்களின் பிரதிநிதிகள் அடங்கிய போராட்ட செயல் கமிட்டி அமைக்கப்பட்டது.

வி. வாழவந்தான், ஏ. பெரியசாமி (சி ஐ டி யூ,) ஆர் பொன்னுததுரை, எஸ். சங்கரன் (சோலிஸ்ட் சங்கம), சே. என் ராமச்சந்திரன், எம். மாணிக்கம் (ஏ ஐ டி யூ சி) என். எஸ். வேலு, கே. கோபால், (அ தி மு க) ஆகியோர் இக்கமிட்டியில் இடம் பெற்றுள்ளனர்.

---

உத்தமபாளையத்தில்

## கல்லூரி மாணவர்கள் கால வரம்பற்ற வேலை நிறுத்தம்

உத்தமபாளையம் ஆக. 19—

மதுரை மாவட்டம் உத்தமபாளையம் "ஹாஜி கருதத ராவுத்தர் கலலூரி"யில் ஆயிரத்துக்கு மேற்பட்ட அனைத்து மாணவர்களும் காலவரமபற்ற வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

சென்ற 17-ம் தேதி முதல் வேலை நிறுத்தம் துவங்கியது.

இந்திய மாணவர் சங்க மாணவர்களும், அண்ணு தி. மு க, தி மு க, காங்கிரஸ் ஆகிய கட்சிகளைச் சார்ந்த மாணவர்களும் வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டனர்.

#### வேலை நிறுத்தம் ஏன்?

பட்டப்படிப்பான பி ஏ. வகுப்பில் ஒருமுறை தவறியவர்கள்கூட, பட்ட மேல் படிப்பான எம். ஏ., எம். காம், எம். எஸ். சி— ஆகிய மேல் வகுப்பில் சேர்ந்து படிப்பதற்கு, மதுரைப் பல்கலைக் கழகம தடை விதித்துள்ளது.

பி ஏ. வகுப்பில் முதல் ஆண்டு, 2-ம் ஆண்டு படிப்புகளில் ஆங்கிலத்தில் 2 முறைக்கு மேல் பரீட்சை எழுதக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டுள்ளது.

மாணவர்களின் முன்னேற்றத்தை பாதிக்கும் இததகைய அநியாயமான தடைகளை எதிர்த்தும், அவற்றை அகற்றிடக் கோரியும் போராடி வருகிருர்கள்.

மற்றும் கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் உள்ளதுபோன்று, பல்கலைக் கழக செனட்டில் மாணவப் பிரதிநிதிகளுக்கு இடமளிக்கக் கோரியும் ஆண்டு தோறும் மொழிப்பாடத்தை —அவசியமில்லாமல் மாற்றுவதைக் கைவிடக் கோரியும் உத்தமபாளையம் ஹாஜி கருத்த ராவுத்தர் கல்லூரி மாணவர்கள் கால வரம்பற்ற வேலைநிறுத்தம் செய்துவருகின்றனர்.

---

சிந்தன் முதமைச்சருக்கு எழுதிய கடிதம்

## அனுப்பியது தபால் மூலம் அல்ல நேரடி ஆள் மூலமேயாகும்

### கருணநிதி தில்லுமுல்லுக்கு தோழர். பரமேஸ்வரன் மறுப்பு

சென்னை, ஆக. 19—

இடது கம்யூனிஸ்ட் தொழிற்சங்கத் தலைவர் திரு. வி. பி சிந்தன், போலீஸ் பாதுகாப்புக் கோரி தமக்கு தபாலில் அனுப்பிய கடிதம், ஜூலை 17-ந் தேதி எழுதபபட்டு, 18-ம் தேதி தபாலில் போடபபட்டு, 19-ம் தேதியன்று தமமிடம் வந்து சேர்ந்தது என்றும், ஆனல் ஜூலை 18-ம் தேதியன்றே அவர் தாககப்பட்டார் என்றும், முதல் மந்திரி திரு. கருணநிதி தமிழ்நாடு சட்டமன்றத்தில் கூறியிருப்பதை மறுத்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை—செங்கை மாவட்ட செயலாளர் தோழர் பி. ஆர். பரமேஸ்வரன் ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

பிடி சோற்றுக்குள் முழுப்பூசணிக்காயைப போட்டு மறைக்கும் முலமைச்சரின் முயற்சியை தெட்டத்தெளிவாக அம்பலப்படுத்திவிட்டார்,

#### தபால் மூலம் அல்ல நேரடி ஆள் மூலமே

தோழர் பரமேஸ்வரன் விடுத்த அறிக்கையில் கூறப்படுவதாவது :—

"முதலமைச்சர் சட்ட மன்றத்தில் தெரிவித்த விபரம், எங்கள் கட்சியினருக்கு வியப்பையே அளித்தது.

தோழர் சிந்தனின் கடிதம் தபால் மூலம் முதலமைச்சருக்கு அனுப்படவில்லை. கட்சி ஊழியா ஒருவரிடம் கொடுத்து அனுப்பப்பட்டது.

கடிதத்தில் எழுப்பப்பட்டுள்ள விபரங்களை தோழர் சிந்தன் டெலிபோன் மூலமாக, முதலமைச்சரின் அந்தரங்கச் செயலாளரிடம் தெரிவித்து, தமது கட்சி ஊழியர் ஒருவர் கடிததத்தை அவரிடம் கொண்டுவந்து கொடுப்பார் என்றும்— உடனே அதை முதலமைச்சரிடம் சேர்ப்பிக்கும்படியும் தெரிவித்தார்.

அந்தரங்கச் செயலாளரும் தோழர் கோரிக்கையை ஏற்றுக்கொண்டார்."

இவ்வாறு அந்த அறிக்கையில் தோழர் பரமேஸ்வரன் சுட்டிக் காட்டியுள்ளார்.

---

சிவகிரி தாலுகா அலுவலக முன்

## கைநெசவுத் தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம்

சிவகிரி, ஆக 19—

சென்ற 8-ம் தேதி சிவகிரியில கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் தங்களுடைய கோரிக்கைகளை வலியுறுத்தி தாலுகா ஆபீஸ் முன் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

ஆர்ப்பாட்டத்தையொட்டி சுமார் 500 பேர் கலந்து கொண்ட ஊர்வலம் தோழர்கள் ஆர் கோபால் (மார்க்சிஸ்ட்) எஸ் சுப்பிரமணியம் (வலது கம்யூ) ஆகியோர் தலைமையில் நடைபெற்றது.

பிறகு தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டமநடத்திதாசில்தாரிடம் கோரிக்கை மனு கொடுத்தனர்.

பின்னர் நடந்த பொதுக் கூட்டத்தில் கோரிக்கைகளை வலியுறுத்தியும், அதிகாரிகளிடம் பேசிய விவரங்கள் பற்றியும் தோழர்கள் கே கந்தசாமி (மார்க்சிஸ்ட்) எஸ் சுப்பிரமணியம்(வகம்யூ) ஆகியோர் பேசினர்.

இதே கோரிக்கைகளை வலியுறுத்தி வாசுதேவநல்லூர் முசாபாரி பங்களா முன் எம் முகமதுகனி கே வீரகாளியப்பன் ஆகியோர் உண்ணுவிரதமிருக்கின்றனர்.

---

## தோழர் வி. பி. சி.க்கு கார்அளிக்க சென்னை தொழிலாளர் முடிவு

சென்னை, ஆக. 19—

தி மு க ரவுடிகளின் கொலைத் தாக்குதலிலிருந்து உயிர் தப்பி, மருத்துவ மனையில் உடல் நலமடைந்துவரும் தோழர் வி பி சிந்தனுக்கு கார் வாங்கித்தர சென்னைத் தொழிலாளர்கள் ஏற்பாடு செய்து வருகிருர்கள்.

தோழர் வி பி சிந்தன் இயக்கப் பணிகளைத் தொடர்ந்து துரிதமாகச் செய்யவும், அவருடைய பாதுகாப்புக்காகவும் இந்தக் கார் வாங்கித்தர முடிவு செய்யப்பட்டுள்ளது. கடந்த 29—7—73-ல் நடைபெற்ற கண்டனக்கூட்டத்தில் வேண்டுகோள் விடுத்தவுடன் தொழிலாளர்கள் உற்சாகமாக முன்வந்து. நிதியளிக்கத்தயார் என்று முழக்கமிட்டனர். அங்கேயே 168 ரூபாய் வசூலாகியது.

தொடர்ந்து கார் நிதி வசூலை மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் சி ஐ டி யூ-வும் சிம்சன் தொழிறசங்கமும திட்டமிட்டு நடத்தி வருகிறது.

சென்னையிலும், சுற்று வட்டாரத்திலும் உள்ள அனைத்து தொழிற்சாலைகளிலும் வசூல் தீவிரமாக நடைபெற்று வருகிறது. பல தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் தங்களது ஒரு நாள் ஊதியத் தொகையைக் கொடுக்க முன் வந்துள்ளனர்.

#### என். ராம் தலைமையில் குழு

இதற்கென அமைக்கப்பட்டுள்ள கார் நிதிக்குழுவுக்கு இந்திய மாணவர் சங்கத்தின் துணைததலைவர் தோழர் என் ராம் கன்வீனராக இருந்து செயல் படுகிருர்.

# தீக்கதிர்

## கேட்டது சோறு கிடைத்ததோ குண்டு

கொள்ளை லாப வெறியர்களையும், பதுக்கல் கும்பலையும், கள்ள மார்க்கெட் கூட்டத்தையும் எதிர்த்து எல்லோரும் போராட வேண்டும் என்று குடியரசுத் தலைவர் வி.வி. கிரி தேச மக்களுக்கு அறைகூவல் விடுத்துள்ளார்.

அதேபோல, பிரதமர் இந்திரா காந்தியும் இந்திய நாட்டின் வாலிபர்களுக்கு ஓர் அறைகூவல் விடுத்துள்ளார். அதில், "பதுக்கல்காரர்களும், கள்ள மார்க்கெட்காரர்களும், கள்ளக் கடத்தல்காரர்களும் சமூக விரோதிகள் என்றும்—இக்கூட்டமானது சமுதாயத்தின் மூலை முடுக்குகளில் ஒளிந்துகொண்டு, ஒரு பெரிய அமைப்பாக செயல்படுகிறதென்று—இக் கும்பலைக் கண்டுபிடித்து மக்கள் மத்தியில் நிறுத்திட வாலிப உலகம் மாபெரும் போராட்டத்தை நடத்திட வேண்டுமென்றும் அழைத்துள்ளார்.

அதேபோன்று, தமிழக முதல்வர் மு. கருணாநிதியும் கறுப்புப் பணம் வைத்திருப்பவர்களால்தான் விலைவாசி உயருகிறதென்றும், அதை வெளிக்கொணர தமக்கு அதிகாரம் வேண்டும் என்றும், கள்ளப் பணத்தையும் பதுக்கலையும் ஒழிக்க உடனடியாக நடவடிக்கை எடுக்காவிட்டால், சோஷலிசத் திட்டம் எதுவும் உருப்படாது என்றும் முழக்கியிருக்கிறார்.

விறுவிறுப்பான அறைகூவல்கள் வெளிவரும் அதே தருணத்தில் மக்களின் அத்தியாவசியப் பண்டங்களைப் பதுக்கி வைத்திருக்கும் திருட்டுக் கும்பலைக் கண்டுபிடித்து அந்தப் பொருள்களை எடுத்து, நியாய விலைக்கு விற்க முற்படும் வாலிபர்களுக்கும் பொது மக்களுக்கும் என்ன கதி ஏற்படுகின்றது என்பதையும் பார்க்கிறோம்.

இதோ மத்தியப் பிரதேஷில், பழைய போபால் நகரில், சுதந்திரதின விழா முடிந்த 2-வது நாளில்—பதுக்கி வைக்கப்பட்டிருந்த கிடங்குகளில் மாணவர்கள் புகுந்து, நியாய விலைக்கு மக்களுக்கு வினியோகிக்க முற்பட்டபோது காங்கிரஸ் ஆட்சியாளர்களின் போலீஸ் படை என்ன செய்தது? ஓடல் மீதிருந்து ஜனக்கூட்டத்தின் மீது 24 தடவை துப்பாக்கியால் சுட்டு அந்த இடத்திலேயே 7 பேர்களை படுகொலை செய்தது. மற்றும் ஏராளமானவர்கள் குண்டு காயங்களுடனும், தடியடி காயங்களுடனும் குற்றுயிரும் குலையுயிருமாக மரணத்தோடு மல்லாடிக் கொண்டிருக்கிறார்கள்,

கொலைவெறித் தாண்டவம் போபாலில் மட்டுமல்ல. இந்தூருக்கு அருகில் உள்ள தார் நகரில், தானியம் கிடைக்காமல் பல நாள் பட்டினி கிடந்த மக்கள், பசி தாங்க முடியாமல் அங்குள்ள உணவுக் கார்ப்பரேஷன் முன்னால் ஆர்ப்பாட்டம் செய்தார்கள். ஆர்ப்பாட்டம் செய்த 2000 மக்கள் மீதும் போலீஸ் படை தடியடி நடத்தியும், கண்ணீர் வெடி வீசியும், பலரைப் படுகாயப்படுத்தி மருத்துவமனையில் போட்டிருக்கிறார்கள். மற்றும் பல ஊர்களிலும் பதுக்கலை எதிர்த்துப் போரிடும் மக்களுக்கும் போலீஸ் படைக்குமிடையே மோதல்கள் ஏற்பட்டுள்ளன.

தமிழ்நாட்டில் மதுரை மாவட்டம் கம்பம் நகரில், அரிசி மூடைகளை நூற்றுக்கணக்கில் கடத்திக்கொண்டு போன கடத்தல் லாரிகளை சர்வ கட்சிக்குழுவினர் தடுத்து நிறுத்தி—நியாய விலைக்கு பங்கிட்டதற்காக திமுக அரசின் போலீஸ் படை என்ன செய்தது? துப்பாக்கியால் சுட்டது. வீடுவீடாகப் புகுந்து மக்களை வேட்டையாடி தடியால் அடித்து, கைகால்களை ஒடித்து மருத்துவ மனையில் தள்ளியதையும் அண்மையில் பார்த்தோம். இதோ குமரி மாவட்டத்திலும் உணவுக் கிளர்ச்சி புரியும் மக்கள் கைது செய்யப்பட்டு காராகிரஹத்தில் அடைக்கப்பட்டதையும் பார்க்கிறோம்.

கேரளத்திலிருந்து வரக்கூடிய செய்திகளோ கல்லையும் இளகச் செய்யும் பரிதாபச் செய்திகளே உள்ளன. கண்ணனூர் மாவட்டம் சிராமொழி என்ற ஊரில் ஒரு ஏழைக் குடும்பம் ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவுகூட கிடைக்காமல் பல நாள் பட்டினி கிடந்து, ஒரே வாரத்தில் ஒருவர் பின் ஒருவராக 3 பேர் பட்டினிச் சாவுக்குப் பலியானார்களாம். இதே போன்று வாக்கலையில் 6 குழந்தைகளுக்குத் தாயான ஒரு மூதாட்டியும் பட்டினியால் மாண்டாராம்.

இதே போன்று, கேரளக் கடற்கரையோரப் பகுதிகளில் ஆண்களும், பெண்களுமான கயறு தொழிலாளிகள், கடை பீடி தொழிலாளர்கள், மீனவர்கள், முந்திரித் தொழிலாளர்கள் முதலானோர் பட்டினியால் மடிந்த பரிதாப நிகழ்ச்சிகள் ஏராளமாக உள்ளன.

வேலையுமின்றி, கையில் நாலு காசுமின்றி, கவளச் சோத்துக்கும் வழியின்றி, பலநாள் பட்டினி கிடந்து குழி விழுந்த கண்களும், கூடாகிப்போன சடலமுமாக, மலை நாட்டு மக்கள் காட்சி அளிக்கிறார்கள்.

இந்திராகாந்தியின் உத்தரப்பிரதேசில் கிழக்குப் பகுதியில் 2 மாவட்டங்களில் மட்டுமே சென்ற மாதம் 100 பேர் பட்டினியால் செத்திருக்கிறார்கள். கண்ணில் பட்ட இலைதழைகளையும் வேர்களையும் பறித்துத் தின்று உயிரைக் கையில் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள்.

இவர்களுக்கெல்லாம் வேலை வாய்ப்பு அளிப்பதாகவும், இவர்களின் வறுமையைப் போக்கவே அவதாரம் எடுத்திருப்பதாகவும் இந்திரா காந்தி முழக்கிய முத்திரா வாக்கியங்களெல்லாம், தெருச் சுவர்களில் எழுதப்பட்டு, இன்னும் அழிபடாமல் இருக்கத்தான் செய்கிறது.

சுவர்களிலே வாக்குறுதிகள் தீட்டப்பட்டிருக்கின்றன. சுதந்திரதினக் கூட்டங்களிலேயே சொல்மாரி பொழிகின்றனர். ஆனால்...

வாழ்க்கையிலே வறுமையும் பட்டினிச்சாவுமே தாண்டவமாடுகிறது, பதுக்கல் கும்பலையும், கள்ளச் சந்தைக் கும்பலையும் கடத்தல் பேர்வழிகளையும், கறுப்புப் பணத்திமிங்கிலங்களையும் கொழுத்துவளரும்படி சகல உதவிகளையும் செய்த காங்கிரஸ் ஆட்சியாளர்கள். இன்று மக்களின் எழுச்சிகண்டு கோழி திருடியும் கூடக்குலாவினதுபோல பதுக்கலுக்கு விரோதமானவர்கள் போல அறைகூவல் விடுக்கிறார்கள்.

அதே போழ்தில், பதுக்கலைக் கைப்பற்றப்போகும் மக்களைத் தடுக்க, 144 தடை உத்தரவுகளையும் ஊரடங்குச் சட்டங்களையும் பிறப்பிப்பதுவும், அதையும் மீறிப் பதுக்கலைப் பிடித்தால் துப்பாக்கியால் சுட்டுக் கொலை புரிவதும் எதைக் காட்டுகிறது?

சோறு கேட்டு ஆர்ப்பரிக்கும் மக்களைச் சுட்டுக் கொல்வதையே தொழிலாகக் கொண்ட காங்கிரஸ் ஆட்சியின் துப்பாக்கிகள் — கோடிக்கணக்கான மக்களைப் பட்டினிப் போட்டுக் கொல்லும் பதுக்கல் கும்பலில் ஒருவனையாவது சுட்டுக் கொன்றிருக்கிறதா?

காங்கிரஸ் ஆட்சியின் உண்மை சொரூபம் இதுதான் நிலப்பிரபுக்களும் பதுக்கல் கும்பலும் கொள்ளைலாப வெறியர்களும் கறுப்புப்பண முதலைகளும், ஆளும் காங்கிரசில் அங்கத்தினர்களாகவும் ஆதரவாளர்களாகவும், அரசாங்கத்தில் மேலதிகாரிகளாகவும், அமைச்சர்களாகவும் இருக்கிற காரணத்தால், இன்றைய காங்கிரஸ் ஆட்சியினால் பதுக்கலைத் தடுத்திட கண்துடைப்பு நடவடிக்கைகள் எடுப்பார்களே தவிர, உருப்படியான நடவடிக்கைகளை மேற்கொள்ள மாட்டார்கள்.

ஆனால் மக்கள் சும்மா இருக்கமுடியுமா? வேதனையால் நொந்த மக்கள் வீறு கொண்டு எழுவார்கள்,

வசதி இருக்கிறவன் தரமாட்டான்—அவனை
வயிறு பசிக்கிறவன் விடமாட்டான்.

---

ஸ்தல ஸ்தாபன தொழிலாளர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றுவிடில்

# மீண்டும் பொதுவேலைநிறுத்தம்

## தமிழக அரசுக்கு சி.ஐ.டி.யூ., ஏ.ஐ.டி.யூ.சி. எச்சரிக்கை

திருச்சி. ஆக. 17—

ஸ்தல ஸ்தாபனத் தொழிலாளர்களின் 19 அம்ச கோரிக்கைகளை தமிழக அரசு உடனடியாக நிறைவேற்றுவிடில், தமிழகம் முழுதும் பொது வேலை நிறுத்தம் நடைபெறும் என்று தமிழக சி.ஐ.டி.யூ. உதவிச் செயலாளர் தோழர் ஏ. நல்லசிவம், ஏ.ஐ.டி.யூ.சி. செயலாளர் தோழர் ஏ.எம். கோபு ஆகியோர், கூட்டறிக்கையின் மூலம் மாநில அரசுக்கு எச்சரிக்கை விடுத்துள்ளனர்.

சென்ற 16-ம் தேதியன்று திருச்சியில் தமிழக சி.ஐ.டி.யூ., ஏ.ஐ.டி.யூ.சி. சங்கங்களின் இணைப்புக் குழுக்கூட்டம் நடைபெற்றது. தங்களது கோரிக்கைகளைப் பெறுவதற்குப் பொது வேலை நிறுத்தம் செய்ய எல்லா ஸ்தல ஸ்தாபனத் தொழிலாளர்களும் தயாராக வேண்டும் என்றும் அறைகூவல் விடுக்கப்பட்டது.

ஏற்கனவே இக் கோரிக்கைகளுக்காக கடந்த ஜூலை 11-ல் தமிழ்நாடு முழுவதும் ஸ்தல ஸ்தாபன தொழிலாளர்கள் ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் செய்தனர். இவர்களது கோரிக்கைகளை நிறைவேற்றுவதாக அப்போது தமிழக அரசு வாக்குறுதி அளித்தது. ஆனால் சில நகராட்சிகளில் வீட்டுவாடகைப்படி கோரிக்கையை மட்டுமே நிறைவேறியது. எல்லா ஸ்தல ஸ்தாபனங்களின் தொழிலாளர்களது கோரிக்கை முழுவதையும் தமிழக அரசு நிறைவேற்றவில்லை.

எனவே, இது சம்பந்தமாக சி.ஐ.டி.யூ., ஏ.ஐ.டி.யூ.சி. இணைப்புக்குழு கூடி விடுத்துள்ள கூட்டறிக்கை வருமாறு —

தமிழக ஸ்தலஸ்தாபன தொழிற்சங்கங்களின் ஏ.ஐ.டி.யூ.சி., சி.ஐ.டி.யூ. இணைப்புக்குழு 16—8—73 அன்று திருச்சியில் கூடிற்று ஏ.ஐ.டி.யூ.சி. சார்பில் தோழர்கள் ஏ.எம். கோபுவும் திருச்சி தோழர்கள் ஆர். சக்கரபாணி, வி. ராஜகோபால், ஆர். கருப்பையா ஆகியோரும், சி.ஐ.டி.யூ. சார்பில் தோழர்கள் ஏ. நல்லசிவனும் எஸ்.ஏ. தங்கராஜும் வி.கே. கோதண்டராமனும் எஸ்.எம். நாசனும் கலந்துகொண்டனர்.

இங்கு அரங்கத்தில் உள்ள பிரச்னைகளைப்பற்றி விவாதித்த பின்பு, பின்கண்ட கோரிக்கைகளை முன்வைத்து தமிழகமெங்கிலுமுள்ள சங்கங்கள் 31-8-73 அன்று வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

### கோரிக்கைகள்

தமிழக மாநகராட்சி, நகராட்சி பேரூராட்சி, ஊராட்சி நகரியம் ஆகியவற்றில் வேலைசெய்து வரும் சுகாதார சிப்பந்திகள் அனைவரையும் தற்போது சில்லரைச் செலவு இனத்தின் கீழ் வைத்திருப்பதை ரத்து செய்து அவர்களை நிரந்தரப் பிரிவில் கொண்டு வந்து, தமிழக அரசு 4—வது பிரிவு சிப்பந்திகளுக்கு வழங்கிவரும் சகல உரிமைகளையும் அனுகூலங்களையும் அவர்களுக்கு வழங்கவேண்டும்.

2)மேற்படி சிப்பந்திகளின் அடைப்படை சமபளத்தை கீழ்க்கண்டவாறு திருத்தி அமைக்க வேண்டும் ரூ 130-5-160-4-180-5-195.

3) மேற்படி சிப்பந்திகளுக்கு பின் கண்டவாறு பஞ்சப்படியை நிர்ணயிக்க வேண்டும்:

சென்னை விலைவாசி உயர்வு புள்ளி ஆயிரத்துக்கு ரூ 141—00 நிரந்தரப் பஞ்சப்படியாகவும், அதற்கு மேல் போகும் ஒவ்வொரு புள்ளிக்கும் 0-30 பைசா பஞ்சப்படி உயர்த்தியும் கொடுக்கப்பட வேண்டும்.

4)வீட்டுவாடகையைமாதம் ரூ. 25 ஆக உயர்த்த வேண்டும்.

5) ஏற்கனவே ஷை சிப்பந்திகளுக்கு கொடுக்கப்பட்டுள்ள வீடுகளுக்கு முதலீட்டுக்கு மேல் வாடகை வசூலாகிவிட்ட காரணத்தால், ஷை வீடுகளை அவர்களுக்கே சொந்தமாக்கிக்கொடுக்க வேண்டும்.

6) ஷை சிப்பந்திகளுக்கு வருட மொத்த சம்பளத்தில் $8\frac{1}{3}$ சதவிகிதத்தை குறைந்தபட்ச போனஸாக கொடுக்க வேண்டும்.

7) ஷை சிப்பந்திகளுக்கு பிராவிடண்ட் நிதிச் சட்டம், சிப்பந்திகள் அரசாங்க இன்ஸூரன்ஸ் சட்டம், கிராஜுடி சட்டம் ஆகியவற்றை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்.

8) மேல்படி சிப்பந்திகளுக்கு சுகாதார அலவன்சாக மாதம் ரூ. 25-ம் நகர யீட்டுப்படியாக மாதம் ரூ. 25ம் கொடுக்கப்பட வேண்டும்.

9) சுகாதார சிப்பந்தி வேலைக்கு ஆள் எடுக்கும் போது வேலதேடித்தரும் ஸ்தாபனத்தின் மூலமாகத்தான் வரவேண்டுமென்ற அரசு உத்தரவை ரத்து செய்ய வேண்டும்.

10) வாராந்திர விடுமுறை தேசிய, பண்டிகை விடுமுறை ஆகியவற்றை முழு நாளாக தரப்பட வேண்டும்;

11) ஷை சிப்பந்திகளுடைய சேவைகால வயதை 60 ஆக நிர்ணயம் செய்ய வேண்டும்.

12) அரசு ஆணை ஜி.ஓ. எம். எஸ். 46640/ இ. 1142 (2125. 5. 42) படி வேலைப் பளுவை நிர்ணயம்செய்து, தேவைப்படும் ஆட்களை நிரந்தரமாக்க வேண்டும்.

13) மேற்படி சிப்பந்திகளுக்கு வருடம் ஒன்றுக்கு 3 ஜோடி உடைகளும் காலணிகளும் தலைப்பான் துணியும் இடுப்புத்துணியும் சோப்பும் எண்ணெய்யும் வழங்கப்பட வேண்டும்.

14) ரெகுலர் சிப்பந்திகளுக்கு தற்போது தரப்படும பென்ஷனை சுகாதாரதொழிலாளிகளுக்கும் தரவேண்டும்.

15) விபத்துக்குள்ளாகும் சுகாதார சிப்பந்திகளுக்கும் நஷ்டஈடு கிடைக்க வகை செய்யப்பட வேண்டும்.

16) ஓராண்டு சர்வீஸ் முடிந்த என். எம். ஆர் தொழிலாளிகளை நிரந்தரமாக்க வேண்டும்.

17) ஷை தொழிலாளர்களுக்கு மாதந்தோறும் சம்பளப்பட்டியலும், சர்வீஸ் கார்டும் வழங்கப்பட வேண்டும்.

18) பண்டிகை அட்வான்ஸ் ரூ 200 கொடுக்கப்படவேண்டும்

19) ஷை தொழிலாளர்களுக்கு வீட்டு வசதியை அதிகரிக்க வகை செய்யப்பட வேண்டும்

17—9—73 அன்றோ அதற்கு பின்பு இணைப்புக் குழு முடிவு செய்யும் ஒரு தினத்திலோ வேலை நிறுத்தம் துவங்கும். இக் கோரிக்கைகளை சுகாதார சிப்பந்திகளுக்கும் மற்றும் பொது மக்களுக்கும் விளக்கிச் சொல்லி, பொது வேலை நிறுத்தத்திற்கு தயாராகும்படி சகல சுகாதார சிப்பந்திகளையும் இணைப்புக் குழு வேண்டிக் கொள்கிறது

ஸ்தலத்திலுள்ள ஏ.ஐ.டி.யூ.சி., சி.ஐ.டி.யூ. சங்கங்கள் தங்களுக்குள் இணைப்பை ஏற்படுத்திக்கொண்டு, வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கான பிரச்சார, இதர தயாரிப்புகளில் ஈடுபடும்படி குழு வேண்டுகிறது.

### காலம் கடத்துதல்

இந்த கோரிக்கைகள் ஏற்கனவே தொழிலாளர் நல இலாகாவின் கவனத்திற்கு கொண்டுவரப்பட்டும் பிரச்னைகள் தீர்க்கப்படாமல் காலம் கடந்துவருகிறது. கிளப்பப்பட்டுள்ள அடிப்படையான பிரச்னைகளுக்கு பதில் அளிக்கும் அதிகாரமுள்ள அரசு அதிகாரிகளை அழைக்காமல், உதவி லேபர் கமிஷனர் 21-8-73 அன்று ஏற்பாடு செய்துள்ள பேச்சு வார்த்தைகளால் எவ்வித பயனும் ஏற்படப் போவதில்லை என்பதை குழு எடுத்துக்காட்ட விரும்புகிறது.

காலம் கடந்து போகு முன்பு தமிழக மந்திரிசபை இப்பிரச்சினையில் தலையிட்டு சுகாதார சிப்பந்திகளின் நியாயமான கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ளும்படி குழு வேண்டுகிறது. அப்படிநடைபெறுமல் போனால் பொது மக்களுக்கு ஏற்படவிருக்கும் அசௌகரியங்கள் முழுமைக்கும் தமிழக அரசே பொறுப்பேற்க வேண்டியிருக்கும்என்பதையும் இக்குழு அரசின் கவனத்திற்குக் கொண்டு வருகிறது.

---



பஞ்சாயத்து யூனியன்

## பள்ளியின் நிலையும் ஊரின் அலங்கோலமும்

ஐயா,

எங்கள் ஊர் காமாட்சிபுரம் சூலூர் பஞ்சாயத்து யூனியன் இருகூர் பேரூராட்சிக்கு உட்பட்ட ஊரியாகும் எங்கள் பகுதி பள்ளி 75 அடி நீளமும் 25 அடி அகலமும் உள்ளது. மேற்படி பள்ளியில் மூன்று ஆசிரியைகளும் 100 மாணவ மாணவிகளும் உள்ளனர். எட்டு வருடங்களுக்கு முன்னதாக ஊர் ஜனங்களின் முயற்சியால் பணம் வசூலித்து கட்டப்பட்டது பிறகு பள்ளிக்கூடம் பஞ்சாயத்து யூனியனிடம் ஒப்படைக்கப்பட்டது அதற்குப் பிறகு பள்ளியை சுற்றுச் சுவர்கள் பாதி மண் சுவராகவும் மேல் பாதி பலகைகளாலும் அமைக்கப்பட்டது.

மேற்படி பள்ளியின் சுவர்கள் பழுதடைந்து எந்தச் சமயத்திலும் மேலே விழக்கூடிய சூழ்நிலையில் உள்ளது. இது சமபந்தமாக ஆட்சித் தலைவர் முதல—கல்வி நிறுவனத்திற்குட்பட்ட அதிகாரிகள் வரையிலும் நாங்கள் மனு கொடுத்து பல வருடங்களாகியும் இது வரையிலும் அதிகாரிகள் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை, எனவே எந்த விதமான அசம்பாவிதம் நடந்தாலும் சம்பந்தப்பட்ட அதிகளே பொறுப்பாவார்கள்.

எனவே சம்பந்தப்பட்ட அதிகாரிகள் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுகிறோம்.

அதே போன்று குடிதண்ணீர் பஞ்சத்தைத் தீர்க்க தண்ணீர்த் தொட்டி கட்டித் தரக் கோரியும், பாதை செப்பனிடக் கோரியும், மற்றும் சாக்கடை டிச்சுகளைக் கட்டித் தரக் கோரியும் பஞ்சாயத்து அலுவலகம் முன்னால் உண்ணாவிரதமும் ஆர்ப்பாட்டமும், மறியலும் நடத்தியும் நேரடிப் பேச்சு வார்த்தைகள் மூலமும் இது வரையில் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை,

எனவே இப்பிரச்னையில் தலையிட்டு உரிய நடவடிக்கைகளை எடுக்குமாறு சம்பந்தப்பட்ட இருகூர் பேரூராட்சித் தலைவரும், பட்டக்காரர் விவசாய சங்கத் தலைவரும், மாபெரும் சிண்டிகேட் தலைவருமான கே குப்புசாமியையும், எங்கள் ஊர்ப் பிரச்னையில் நடவடிக்கை எடுக்க மாவட்ட ஆட்சித் தலைவரையும் கவனிக்க வேண்டுகிறோம்.

இப்படிக்கு
ஏ மாணிக்கம்
என் ஜெகதீசன்
சோசலிச வாலிபர் முன்னணி
காமாட்சி புரம், கோவை-16

---

ஆரணி தொழிலாளர் போராட்டத்துக்கு

## வந்தவாசியில் உதவி நிதி

வந்தவாசி, ஆக. 19—

சுமார் 40 நாட்களாகப் போராடிவரும் ஆரணி பட்டு நெசவாளர்களுக்கு ஆதரவாக இங்கு உண்டியல் வசூல் செய்யப்பட்டது

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்கள் கே.ஜி. மேனன், கே. கோவிந்தசாமி மற்றும் பலர் பொதுமக்களிடம், ஆரணி பட்டு நெசவாளர் போராட்டத்தை விளக்கிக்கூறி உண்டியல் வசூல் செய்தனர்.

அதில் வசூலான ரூ. 30-ஐ போராட்டத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டது.

---

திருநெல்வேலி மாவட்டத்தில்

## அரசு--அரசாங்க ஊழியர் சங்கங்களின் ஒருங்கிணைப்பு

புதூர் ஆக. 11—

ஊழியர்களின் கோரிக்கைகளை ஒன்றுபட்ட குரலில் பிரதிபலிக்க நெல்லை மாவட்டம் புதூரில், என். ஜி. ஓ.க்கள் மற்றும் அரசு சார்பு சங்கங்களின் ஒருங்கிணப்பு ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது,

இந்த ஒருங்கிணைப்பில் இவ் வருடத்தில் உள்ள தமிழ்நாடு என். ஜி. ஓ. சங்கம், ஊராட்சி ஒன்றியப்பணியாளர்கள் சங்கம், தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி, திருநெல்வேலி மார்க்கட் கமிட்டி சிப்பந்திகள் சங்கம், மின ஊழியர் சங்கம், கிராமக் கூட்டுறவு நாணயச்சங்கச் செயலாளர்கள் சங்கம் என பல்வேறு ஊழியர் சங்கங்கள் உள்ளன.

இவ் ஊழியர்களின் நலன் பேணப்படவும் உரிமைகளைக் காத்திடவும், உயர் அதிகாரிகளின கொடுமையிலிருந்து ஊழியர்களை தற்காத்துக் கொள்ளவும், தமிழ்நாடு என். ஜி. ஓ. சங்கத்தின் மாநில சங்கத் தலைமை செய்யத்தவறும் பணியினைச் சுட்டிக்காட்டி தேவையான தொடர் நடவடிக்கை எடுக்க வலியுறுத்தும் பொருட்டும் மேலே கூறிய சங்கங்கள் அனைத்தும் கூடி எடுத்த முடிவுக்கிணங்க இந்த ஒருங்கிணைப்பு உதயமானது.

ஒருங்கிணைப்பின் அமைப்புக் கூட்டம் என்.ஜி.ஓ. சங்கம், புதூர் உட்கிளையில் தலைவர் திரு இரா. இரத்தினம் தலைமையில் கூடியது.

திருவாளர்கள் கணேசன் தலைவராகவும் வி. பெருமாள் சாமி உபதலைவராகவும் ஆர். பால்ராமசாமி செயலாளராகவும், கி. துரைராஜ் இணைச் செயலாளராகவும், ஆறுமுகம் கேசவன் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஒருங்கிணைப்பு அமைவதை வரவேற்று உற்சாகம் ததும்பும் முறையில் பலத்த கரகோசத்துடன் கூட்டம் முடிவுற்றது.

---

நெல்லை மாவட்டத்தில்

## ஹாஸ்டல் தொழிலாளர்களுக்கு சம்பளப்பாக்கியை வழங்குக

### சி.ஐ.டி.யூ. வற்புறுத்தல்

சங்கரன் கோவில், ஆக 16—

நெல்லை மாவட்டத்தில் உள்ள அரசு மாணவர் இல்லங்களில் சமையல் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குஉயர்த்தப்பட்டுள்ள அடிப்படைச் சம்பளம் வழங்கப்படவில்லை என்று மாநில கல்வி, அமைச்சர் அரிசன நல அமைச்சர் அக்கவுண்டன்ட் ஜெனரல், மாவட்டக் கலெக்டர் வெல்பேர் ஆபீசர் முதலியோருக்கு சங்கரன் கோவில் சி. ஐ. டி. யூ. சங்கச் செயலாளர் தோழர் ஆர். எஸ். முப்பிடாதி கடிதம் எழுதியுள்ளார்.

இம்மாவட்டத்தில் உள்ள சுமார் 72 அரசு மாணவர் இல்லங்களில் சுமார் 220 தொழிலாளர்கள் சமையல் வேலை புரிகின்றனர். அவர்களுக்குமுதலில், மாதம் ஒன்றுக்கு 25 ரூபாயாக இருந்த அடிப்படைச் சம்பளத்தை ரூ. 45 ஆக உயர்த்தப்பட்டது அதன்படி 1972 ஆம் ஆண்டு மார்ச் மாதம் முடிய 18 மாதங்களுக்கு ரூ. 360 வரை ஒவ்வொரு தொழிலாளிக்கும் கிடைக்க வேண்டும். ஆனால் அந்தப் பாக்கி இன்னும் கொடுக்கப்படவில்லை என்றும் எனவே அந்த பாக்கிச் சம்பளம் முழுவதும் உடனே வழங்க ஏற்பாடு செய்யும் படியும் தனது கடிதத்தில் தோழர் ஆர். எஸ். முப்பிடாதி வற்புறுத்தியுள்ளார்

---

## கள்ள மார்க்கெட்டை கண்டித்து

### பொதுக்கூட்டங்கள்

தக்கலை, ஆக, 19—

கூட்டுறவு சங்கத்தில் விற்பனைக்குக் கொடுக்க அரிசியை கள்ள மார்க்கெட்டில் விற்க முயற்சித்த போது பொது மக்கள் கண்டு பிடித்தனர்.

இச்சம்பவம் குறித்து நடவடிக்கை எடுக்கக்கோரி சென்ற 10-ம் தேதி குமரி மாவட்டம் திருநயினார்குறிச்சியில் சர்வகட்சி பொதுக் கூட்டம் நடைபெற்றது.

இக்கூட்டத்திற்கு திரு. கிருஷ்ணபெருமாள் தலைமை வகித்தார்.

தோழர்கள் என். பதமநாபன் ஆர் சுந்தரேசன்(மார்க்சிஸ்ட்) இரங்கன் (ஸ்தாபன காங்கிரஸ்) ஆகியோர் பேசினர்.

### மேற்கு நெய்யூர்

மேற்கு நெய்யூர்கூட்டுறவு சங்கத்தில் அரிசி கடத்தி கள்ள மார்க்கெட்டில் விற்பனை செய்ததைக் கண்டித்து சென்ற 14ம் தேதி தோழர்எஸ். ரசல்ராஜ் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் வி. நாராயண பிள்ளை, ஏ. நடராஜன், ஆகியோர் பேசியபின்னர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாவட்டச் செயலாளர் தோழர் பி. திவாகரன் பேசுகையில் அரிசி கடத்தலைப் பற்றியும். அரிசிப் போராட்டம் பற்றிய ஒப்பந்த விவரங்களை ஸ்தாபன காங்கிரஸ் தெளிவுபடுத்த வேண்டுமென்றும் 200 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக் கடை திறக்க வேண்டும். இரண்டு ஏக்கராவுக்கு மேல்தான் நெல் கொள் முதல் செய்ய வேண்டுமென்றும், கிலோ அரிசி ஒருரூபாய்க்கு வழங்கப்பட வேண்டும்: அதற்கான ஒன்றுபட்ட போராட்டத்தில் அனைத்துக் கட்சிகளும் பங்கு பெற வேண்டுமென்றும் விரிவாகப் பேசினர்.

இக் கூட்டத்தில் ஜே. டி. ஜெயபால், வி. பரமேஸ்வரன் நாயர் (வ. கம்யூ) ஆகியோரும் பேசினர்.

கூட்டத்திற்கு முன் திங்கள் சந்தையிலிருந்து தோழர் எஸ். ரசல்ராஜ தலைமையில் ஊர்வலம் நடைபெற்றது.

---

## "வலதன்மாரே தெம்மாடிகளே"

### காங்கிரசின் புது கோஷம்

பாலக்காடு, ஆக. 17—

"வலதன் மாரே தெம்மாடிகளே நிங்ஙள் நாளுகள் எண்ணப்பெட்டு". (வலதுகளே தரம்கெட்டவர்களே உங்களுடைய முடிவுகாலம்நெருங்கிவிட்டது) இந்த கோஷம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எழுப்பியகல்ல; அச்சுதமேனன் ஆட்சியில் அடியும் உதையும பட்டவர்கள் எழுப்பியதுமல்ல.

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் கூட்டாளியான, ஆட்சி பங்காளியான இந்திரா காங்கிரஸ் தொண்டர்கள் பாலக்காட்டில் ஒரு ஊர்வலத்தின் போது எழுப்பிய கோஷம் தான் இது.

---

## வி. பி. சிந்தனை அரிகிருஷ்ணகோனர் பார்த்தார்

சென்னை, ஆக. 18—

சென்னை ஸ்டான்லி மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றுவரும் தோழர் வி. பி. சிந்தனை, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் குழு உறுப்பினரும், அகில இந்திய விவசாயிகள் சங்கப் பொதுச் செயலாளரும் மேற்கு வங்க முன்னாள் வருவாய்துறை அமைச்சருமான தோழர் அரிகிருஷ்ணக்கோனர் கடந்த 11-ந் தேதியன்று சென்று பார்த்தார். அவர் உடல்நலம் பற்றி விரிவாக விசாரித்தார்,

∴ ∴ ∴

ஜான்சிராணி படைத் தலைவி

## கர்னல் லட்சுமி சந்தித்தார்

நேதாஜியின் இந்திய தேசிய ராணுவத்தில், ஜான்சிராணி படைத் தலைவியாக இருந்த கர்னல் திருமதி லெட்சுமி, கடந்த 13-ந் தேதியன்று மருத்துவமனை சென்று தோழர் வி. பி. சிந்தனை சந்தித்து உடல்நலம் விசாரித்தார்.

### பொள்ளாச்சி பொதுப்பணித்துறை தொழிலாளர் போராட்டம் ஏன்?

# ஒரு கண்ணில் வெண்ணை மறுகண்ணில் சுண்ணும்பா?

# தமிழக அரசு அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் நடத்தகூடாதாம்

## பேச்சுவார்த்தை நடத்தி தீர்வு காணமாட்டார்களாம்

(சிறப்பு நிருபர்)

பொள்ளாச்சி, ஆக. 18—

**பொள்ளாச்சி பொதுப்பணித்துறை ஊழியர்கள் போராட்டம் பற்றிய விரிவான விவரங்களை கீழே தருகிறோம்.**

5-12-71-ம் நாள் நடந்த பொதுப் பணித்துறை தொழிலாளர்களின் மாநாட்டில் நிறைவேற்றிய கோரிக்கைகள் சம்பந்தமாக இது வரை அதிகாரிகளோ அரசோ எவ்வித பேச்சு வார்த்தையும் நடத்தி பிரச்னைகளை தீர்க்க முன்வரவில்லை.

ஷ கோரிக்கைகள் சம்பந்தமாக பேச்சுவார்த்தை நடத்தி தீர்வு காணும்படி சங்க உபதலைவர் தோழர் வி கே. பால்ராஜ் 30-1-72-ம் தேதியிலும் 28-3-72-ம் தேதியிலும்தலைமை பொறியாளரைநேரில்கண்டுபேசினர்.

### நிர்வாகத்தின் அலட்சியப்போக்கு

ஆனால் பல வேலைகள் இருப்பதாக நிர்வாகிகள் கூறி காலங் கடத்தும் தந்திரத்தை மேற்கொண்டார்கள், மேலும் 4-1-72-ம் தேதியிலும் சங்க உப தலைவர் வி. கே. பால்ராஜ், சென்று தலைமை பொறியாளர் அவர்களை காலங்கடத்துவதால் பிரச்சனைகளை தீர்க்க முடியாது என்றும், நிர்வாகத்தின் மீதும் — அரசின் மீதும் தொழிலாளர்கள் கொண்டுள்ள நல்லெண்ணம் மாறி-வெறுப்பு ஏற்படுகிறது என்றும், இதனல் தொழிலாளர்கள் நேரடி நடவடிக்கையில் ஈடுபட வேண்டிய நிர்பந்தம் ஏற்படும் என்றும். கூறினர். மேலும் 5-4-73 அன்றும் ஷ தலைமைப் பொறியாளரை கண்டு பேச்சுவார்த்தை நடத்த கோரினர் தொழிலாளர்களின் சகல கோரிக்கைகளையும் தெரிவித்தால் போதும் நாங்கள் பேச்சுவார்த்தை நடத்தி பிரச்சனைகளுக்கு தீர்வு காணுவோம். இது தொழிலாளர்களின் அரசு என்று அரசின் கொள்கைகைகள் பிரகடனப்படுத்தப் படுகின்றன.

ஆனல் அதற்கு நேர் மாருக இங்கு நடப்பது எதனல் என்று புரிந்து கொள்ளமுடியவில்லை. இது போன்ற அலட்சியமான போக்குதான் தொழிலாளர் கள்போராட்டங்கள் நடத்த வேண்டிய நிர்பந்தங்களை ஏற்படுத்துகிறது. காலங் கடத்தும் போக்கினல் தொழிலாளர்கள் மத்தியில் நியாயமான ஆத்திரம் ஏற்பட்டு 7-9-72 ம் தேதி திட்டம் முழுவதும் ஒருநாள் ஆர்ப்பாட்ட ஊர்வலங்களும், 21—9—72-ம் தேதி திட்டம் முழுவதும் ஒருநாள் உண்ணாவிரதப் போராட்டமும், 8—10—72-ம் தேதி பொள்ளாச்சி தலைமை பொறியாளர் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்ட ஊர்வலமும, அன்று மாலை பொள்ளாச்சி நகரில் பொதுக் கூட்டமும் நடத்தினர்கள்.

ஆர்ப்பாட்டங்கள்— உண்ணாவிரதம் — பெருந்திரள்ஆர்ப்பாட்டம்—பொதுக் கூட்டம் நடத்தி சங்கள் கோரிக்கைகளை வலியுறுத்திய பின்பும் — நிர்வாகம் அசையவில்லை. பேச்சு வார்த்தை மூலம் முடிவு காண விரும்ப வில்லை.

### தோழர். ரமணி முயற்சி

எனவே சங்க தலைவர் தோழர்கே.ரமணி மாநாட்டு கோரிக்கைகளை விளக்கியும் காலங் கடத்துவதால்தொழிலாளர்களின பிரச்னைகள் தீராது என்பதையும்,மேலும் நியாயமான ஆத்திரம் ஏற்படும் என்றும் குறிப்பிட்டு, உடனடியாக பேச்சு வார்த்தை மூலம் பிரச்னைகளைத் தீர்க்க முன் வரும்படி கோரி தலைமைப் பொறியாளருக்கு கடிதம் அனுப்பினர்.

இதற்குப் பின்பு-நிர்வாகம் 18—11—72-ல் பேச்சு வார்த்தை நடத்த வரும்படி அழைப்பு அனுப்பியது.

இருதரப்பு பேச்சு வார்த்தையில் சங்க தலைவர் தோழர் ரமணி, உபதலைவர் தோழர் வி கே பால்ராஜ பொதுச் செயலாளர் ஆர நாராயணன் ஆகியோரும் நிர்வாகத்தின் சார்பில் தலைமைப் பொறியாளர் பி கே வேதநாயகம் மேற்பார்வை பொறியாளர் ஏ எஸ் ஹெக்டே மற்றும் அதிகாரிகளும் கலந்து கொண்டனர்.

இதில் சங்க கோரிக்கைகள் அனைத்தும் அரசுதான் தீர்க்க வேண்டும் என்று அதிகாரிகள் கூறினர்கள். தாங்கள் அரசிற்கு பரிந்துரை அனுப்புவதாகவும் கூறினர்கள்.

மேலும் 8—6—70 அன்று கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் முன்னிலையில் ஒப்புக்கொள்ளப்பட்டு பி ஏ பி நிர்வாகத்தினரால் பி ஏ பி வேலை நிதி ஊழியர்களுக்கு தனியாகவும், தினக்கூலி தொழிலாளர்களுக்கு தனியாகவும் சர்வீஸ் பட்டியல் தயார் செய்யப்பட்டது.

இந்த சர்வீஸ் பட்டியலுக்கு முரணுன வகையில் ஆழியார் கோட்டத்தைச் சேர்ந்த மூன்று தொழிலாளர்களை 1—1—72 முதல் வேலை நீக்கம் செய்து உதவிப் பொறியாளர்களான சிவசாமி, வெங்கடசுப்பிரமணியம் ஆகியோர் உத்திர விட்டார்கள்.

இந்த சர்வாதிகார நடவடிக்கை பற்றி தலைமை பொறியாளர், மேற்பார்வை பொறியாளர் முதலியவர்களிடம் பல முறை எடுத்துக்கூறி, மேற்படி தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது.

ஆனல் சர்வாதிகாரஎண்ணம் கொண்ட நிர்வாகம மேற்சொன்ன தொழிலாளர்களுக்கு வேலைகொடுக்க மறுத்துவிட்டது.

### உண்ணாவிரதம்

எனவே, தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்ற கோரிக்கையின் பேரில் 4—3—73-ம் தேதி ஆழியாரில் தொழிலாளர்களால் உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டது,

மேற்படி கோரிக்கை சம்பந்தமாக 8—3—72-ம் நாள் பொள்ளாச்சியில் நடந்த பேச்சு வார்த்தையில் வேலை நீக்கம், சர்வீஸ் பட்டியலபடி தொழில் சுகராறுசட்டத்தை மீறி செய்யப் பட்டுள்ளது என்றும் எனவே அவர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்றும் தொழிலாளர் அதிகாரி தன் முடிவை தெரிவித்தார்.

ஆனல் பி ஏ பி. தலைமை பொறியாளர் தொழிலாளர் அதிகாரியின் தீர்ப்பை ஏற்காமல் 8-6-70ல் மாவட்ட ஆட்சித் தலைவர் முன் பேசி ஒப்புக்கொள்ளப்பட்டு சென்னை தலைமை பொறியாளரால் போடப்பட்ட உத்தரவுக்கு எதிராக, தினக்கூலித் தொழிலாளர்களின் சர்வீஸ் பட்டியலையே ரத்து செய்தார். இதனல் தொழிலாளர்கள் ஆத்திரமுற்றனர். மேலும் 1939லே இருந்த காவலர்கள், ஸ்வீப்பர்கள் முதலியவர்களுக்கு யூனிபார்ம் உடை கொடுக்க வேண்டும் என்று உத்தரவை கூட நிர்வாகம் அமுல் நடத்தவில்லை.

### அதிகாரியுடன் சந்திப்பு

இரண்டாவது, சம்பள கமிஷனில் வேலை நிதி ஊழியர்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் அநீதியை மாற்றவும், முறையான சம்பளம் கோரியும் அனுப்பப்பட்டிருந்த சங்க கோரிக்கைகள் பற்றி பேச வருமாறு வந்த அழைப்பின்படி-சங்க உபதலைவர் வி. கே பால்ராஜும், பரப்பலாறு கிளை செயலாளர் விஜயராகவனும் சென்னை சென்ருர்கள். அங்குதமிழ்நாடு வேலை நிதி ஊழியர்சம்பள சீரமைப்புக்குழுவிடம் 19-2-73 அன்று வேலை நிதி ஊழியர்களின் நிலைமைகள் பற்றி மிக விரிவாக எடுத்துரைத்தனர்.

முடிவில் விவாதங்களின் அடிப்படையில், சங்கத்திலிருந்து சம்பளம் வரையறுத்து ஒரு கோரிக்கை அனுப்பவும், அதனடிப் படையில் மேற்குறிப்பிட்ட குழு மீண்டும் சங்கப் பிரதிநிதிகளிடம் விவாதித்து சம்பளம் நிர்ணயம் செய்வதாகவும் அதனை அரசிற்கு பரிந்துரையாக அனுப்புவதாகவும் ஒப்புக்கொண்டனர்.

இதை ஏற்று சங்கம், சம்பளம் சம்பந்தமாக வரையறுத்து ஒரு கோரிக்கை பட்டியல் அனுப்பியது.

சங்கம் அனுப்பியகோரிக்கை என்னவானதோ தெரியவில்லை. ஆனல் இக் கூட்டம் நடக்கும் முன்பே அரசு நிர்ணயித்திருந்த சம்பள உத்தரவை- (அதை மறுத்துதான் குழுவில் சங்கம் வாதாடியது) அமுல் நடத்தும்படி அரசுதன்னிச்சைப் போக்கில் ஒரு ஆணையை 17—5—73-ல் 'வெளியிட்டது.

இது சென்னையில் சங்க பிரதிநிதிகளை அழைத்துப் பேசிய முறைக்கு முற்றிலும் விரோதமான செயலாகும். மேலும் இந்த ஆணையில் 10 ஆண்டுகள் சர்வீஸ்ஆனவர்களை மூன்ருவது தகுதிக்கும், 11 முதல் 20 ஆண்டு சர்வீஸ் ஆனவர்களை இரண்டாவது தகுதிக்கும்21 ஆண்டு முதல் முதல் தகுதிக்கும மாற்ற வேண்டும்என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனல் இப்போது 1 வது, 2 வது தகுதிகளில் பணிபுரிபவர் பெரும்பாலான தொழிலாளர்கள் 3-வது தகுதிக்குச் செல்ல வேண்டும்,அப்படி 3-வது தகுதிக்குச் செல்லும் போது வாங்கும சம்பளம் குறைவதோடு ஏற்கனவே வாங்கி விட்ட சம்பளத்தையும் திரும்ப கொடுக்க வேண்டும்-மேலும் தகுதிக் குறைவு செய்யப்படுவதால் சம்பள ஸ்கேல் முடிவுற்று அடுத்த சம்பள கமிஷன் வரும்வரை வருட ஊதிய உயர்வு இல்லாமல் போய் விடுகிறது குதிரை கீழே தள்ளியதுமல்லால் — குழியையும் பறித்ததுபோல, ஏற்கெனவே நிர்ணயித்த சம்பளம் போதாத, இந்த விலைவாசி உயர்வில் வாழ்க்கை நடத்த முடியாது. எனவே அதை மாற்றி குறைந்த பட்ச சம்பளத்தையே பறிமுதல் செய்ய அரசு முற்பட்டதினல் தொழிலாளர்களின் கொதிப்பு மேலோங்கியது.

ஒவ்வொரு இலாகாவிலும் உயர்ந்த சகுதிபெற்று முன்னேறும் போது, இங்கு ஒரு ஆணையின் மூலம் ஏற்கெனவே இருந்த தகுதியையும் விட குறைவான தகுதிக்கு இந்த தொழிலாளர்களை போகச் சொல்வதில் எவ்வித நியாயமுமில்லை.

வருட ஊதிய உயர்வுகூட இல்லாமல் போகும்படி இந்த தகுதிக்குறைவு உத்தரவு தொழிலாளர்களை கடுமையாகப் பாதித்தது

### இதுதான் சோசலிசமா?

அரசின் சகல ஊழியர்களுக்கும் 20—10—70 முதல் புதிய சம்பள விகிதம்அமுல் நடத்திவிட்டு — வேலை நிதி ஊழியர்களுக்கு மட்டும் 1—10—71 முதல் நிர்ணயம் செய்திருப்பது — அரசின் எந்த தொழிலாளர் கொள்கையின்படி என்று தெரியவில்லை. இதன் மூலம் இந்த ஊழியர்களுக்கு மட்டும் ஒரு வருட சம்பள உயர்வு— சலுகை — வருஷ ஊதிய ஊயர்வை இல்லாமல் செய்வதுதான் அரசின் சோசலிச சமதர்ம தொழிலாளர் கொள்கையா — என்று தெரியவில்லை.

ஒரே விதமான தகுதியில் ஒரே விதமான வேலைகளை செய்பவர்களை - தினக் கூலியில் குறைந்த சம்பளத்திலும் - மாத ஊதியத்தில் கொஞ்சம் அதிகமாகவும் சம்பளம் கொடுத்து தொழிலாளர்களை இரண்டாக பிரித்து சுரண்டிக் கொழுப்பது பிற்போக்குத்தனமான முதலாளித்துவ கொள்கையாகும். ஆனல் தொழிலாளர்களின் அரசு என்றும், சோசலிச அரசு என்றும், சமதர்ம அரசு என்றும் கூறிக் கொண்டிருக்கும் தமிழக அரசு, தனனுடைய இலாகாவான பொதுப் பணித் துறையில் இதேபோன்றபாகுபாட்டை ஏற்படுத்தி தொழிலாளர்களை சுரண்டிக் கொண்டிருக்கிறது.

சம வேலைக்கு - சம தகுதிக்கு - சம சம்பளம கொடுக்க வேண்டும் என்ற நியாயமானகோரிக்கையை கூட நிறைவேற்ற அவர்கள் தயாராக இல்லை.

பல ஆண்டுகளாக தினக் கூலியில் மிகவும் குறைந்த சம்பளத்தில், மாற்றலாகி சென்ருல் பயணப்படி இல்லாமல - விடுமுறை வசதி இல்லாமல் இருக்கும் தொழிலாளர்களை மாதச் சம்பள ஊழியர்களாக்க வேண்டும் என்ற கோரிக்கையை கூட அரசு ஏற்றுக் கொள்ள வில்லை.

பரப்பலாறு திட்டத்திற்கு மலைப்படிக்காக பலமுறை நேரில் கேட்டும் - எழுதியும் அதிகாரிகளை பேட்டி கண்டும். அரசு செயலாளரை நேரில் பார்த்து பேசியும் இதுவரை அசைந்து கொடுக்கவில்லை. இது போலவே பி ஏ பி திட்டப் பகுதிகளுக்கு திட்டப்படி வேண்டியும் கொடுக்க வில்லை.

இதை கேட்டால் கடனு ராமநதி தொழிலாளர்கள் செனனைக்கு போய் திட்டப் படி வாங்கியதைப போல நீங்களும் வாங்குங்கள்'' என்று கூறுகிருர்கள். மாநாட்டு கோரிக்கைகள் சம்பந்தமாக சங்க உபதலைவரும், பரப்பலாறு செயலாளரும் மீண்டும 21—2—73 அன்று சென்னையில் பொதுப்பணித்துறை செயலாளரை கண்டு பேசினர்கள். ஆனல் பலன் ஏற்படவில்லை.

### போராட்டங்கள்

இதனல் தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளை அரசின் கவனத்திற்கு கொண்டுவர 27—3—73 அன்று ஒருநாள் திட்டம் முழுவதும ஆர்ப்பாட்டம் நடததினர்கள் 3—4—73 அன்று ஒருநாள் உண்ணாவிரதமும் நடத்தினர்.

மேலும் கோரிக்கைகள் அனைத்தையும் அரசுதான் தீர்க்க வேண்டும் என்று தலைமை எஞ்சினியர் கூறிவிட்டதையும், மேற்படி கோரிக்கைகள், அதற்காக எடுக்கப்பட்ட சமரச நடவடிக்கைகள் அனைத்தையும் விளக்கியும் எனவே இக்கோரிக்கையில் தலையிட்டு பேச்சு வார்த்தை நடத்தி தீர்வுகாண கோரியும் 8—4 73-ல் தமிழக அரசு பொதுப்பணித்துறை அமைச்சர் அவர்களுக்கு கடிதம் எழுதப்பட்டது.

ஆனல் அரசு பேச்சு வார்த்தை மூலம் பிரச்சினைகளை தீர்க்க முன்வரவில்லை.

இந்த நிலைமையில் தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளை பெற வேறு வழியில்லை. இந்த அரசு எவ்வித பேச்சு வார்த்தைக்கும்தயாரில்லை என்று கருதினர்கள். நேரடி நடவடிக்கையில் ஈடுபட முடிவு செய்தார்கள்.

இதன்படி 30—6—73க்குள் கண்டன ஊர்வலம் பொதுக்கூட்டம் நடத்தி கோரிக்கைகளை நிறைவேற்றும்படி அரசிற்கு தெரிவித்தார்கள்.

4—7—73 அன்று கோவையில் தொழிலாளர் அதிகாரி முன், ஒரு பேச்சு வார்த்தை நடந்தது.

தங்களால்முடிக்கக்கூடிய கோரிக்கைகளை இயலாது— தேவையில்லை என்று கருதுகிருேம் என்றும், மற்றும் கோரிக்கைகளை அரசுதான் தீர்க்க வேண்டும் என்றும் நிர்வாகத்தின் சார்பில் எழுதிக் கொடுத்து விட்டார்கள்.

ஒவ்வொருஆண்டும் மேற்பார்வை பொறியாளர்கள் கூடி சம்பளம் நிர்ணயம் செய்து 'ஷெட்யூல் ஆப் ரேட்' என்ற பெயரில் 5 காசு அல்லது 10 காசு என்று தினக்கூலிதொழிலாளர்களுக்கு சம்பள உயர்வு கொடுப்பார்கள். இந்த சம்பளஉயர்வு மாவட்டத்திற்கு மாவட்டம் வித்தியாசமாக இருக்கும் ஆங்காங்குஉள்ள விலைவாசி உயர்வு அடிப்படையில் இந்த சம்பளம் நிர்ணயிக்கப்படுவதாக கூறுகிருர்கள். ஆனல் விலைவாசி

(4-ம் பக்கம் பார்க்க)

## சிறைநோக்கிப் போகுது சிவப்பு முண்டாசுகள்!

— மணியரசன் —

தஞ்சை பூமிக்குத் தண்ணீர் வந்தது;
நஞ்சை வெடிப்புகள் நன்கு உறிஞ்சின!
விலைவாசி வெயிலால் வெடித்துக கிடக்கும்
குலைவாசி உறிஞ்ச கூலிநீர் கேட்டான்.
நிலப் பிரபு நீர்த்தேக்கம் திறக்க மறுத்து
"வெளிப்புறக் கசிவில் வேட்கை தணி''யென்றது!

புராணச் சகுனிக்குக் கலெக்டர் வேஷமிட்டு
மிராசுக் கௌரவர்கள் முத்தரப்புச் சூதாடினர்.
பாண்டவ வலதுகள் பாஞ்சாலியாய உழவரை
ஆண்டு பணயமிட்டார்; ஆண்மை இழந்து நின்ருர்!
வெண்மணி யாகத்தில் வீரச்சூள் ஏற்றவரோ
கண்மணி சிவப்பேற கர்ஜித்து வெளிபபோந்தார்!

கூலி மக்கள் கூடினர் குப்பத்தில்
வேலை நிறுத்த வேள்வியைத் தொடங்கினர்!
நாட்கள் நகர்ந்தன! நாற்று மரகதம்
சேற்றுக் கழுத்தை சிங்காரிக்க வில்லை!
சோறறுக்கும வயிற்றுக்கும் தூரம் வளர்ந்தது;
ஆற்ருது பணிவரென ஆண்டைகள் நினைத்தன!
பட்டினிப பாலைவன ஒட்டகங்களோ
வெற்றிச் சோலைக்காய் விரும்பி நடந்தன!

"முப்பது நாளில் நடவேலாடும் கருணைவை
முபபத்தைந் தாச்சுதே; மூப்பெய்திப் போச்சுதே!''
கருணை வயதெண்ணிக கலங்கிய வள்ளலார்கள்
குருணைக் கஞ்சியின்றிக் குடல்கள் துடிக்கும்
பட்டினிக்கு வயதேறும் பசிமூப்பைத் தடுத்திட
எட்டு நாட்களாய் இரங்கிடக் காணும்!

★ ★ ★ ★

காவல் துறைலாரி களத்து மேட்டிலே;
ஏவல் நாய்களாய் இருமபுத் தொப்பிகள்;
இரிஞ்சூர் எஜமான்கள் எறியும் எலும்பில்
பெறுஞ்சுகம் பெரிதெனத் தெருக்களில் திரிந்தன!
பசிப்புரட்சிக் காட்பட்ட பஞ்சைகளை, பண்ணையார்க்கு
பசுமைப் புரட்சி செய்ய பலாத்காரப் படுத்தினர்!
குடிசைக்குள் நுழைந்து, கூலி கேட்போர்க்கு
"தடிக்கூலி'' தந்து சாகுபடிக் கழைத்தனர்!
அகிம்சை வெடிதது ஆராதனை செய்த
மகிமையில் காந்திக்கு சாந்தி செய்தனர்!
கோரிக்கைச் சததியா கிரகிகளைத் தூக்கி
லாரியில எறிந்து லத்தியால் முததமிட்டனர்
சிறைநோக்கிப் போகும சிவப்பு முண்டாசுகள்
உரத்துக் கொடுத்த கோஷம் யாதெனில்
"கூலி உயர்வு கொடு'' —என்றல்ல!
'நிலப்பிரபுத்துவம் ஒழிக! புரட்சி ஓங்குக!!''

## போக்குவரத்து ஊழியர் தாக்கப்பட்டார்

படந்தாலுமூடு, ஆக 16-

போக்குவரதது ஊழியர் ஒருவர் காலிகளால் தாக்கப்பட்டது குறிதது காவல் நிலையத்தில் புகார் செய்தும் எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

தமிழ்நாடு அரசு போக்குவரத்து படந்தாலுமூடு டிப்போ (குமரி)யில் ஓட்டுநராக வேலை பார்பபவர் நாணிப் பணிக்கர்.

இவர் சென்ற 29-ம் தேதி வண்டி ஓட்டிச் செல்லுகையில் அதங்கோடு என்னுமிடத்தில் பாஸ்கரன் என்பவரால் பலமாக தாக்கப் பட்டாராம்.

அதன் பிறகும் மேற்படி பாஸ்கரனும் சில காலிகளும் சேர்ந்து நாணிப் பணிக்கரை மிரட்டி வருகின்றனராம்.

இது குறித்து ஓட்டுநர் நாணிப்பணிக்கர் போக்குவரத்துத்துறை டிப்போ அதிகாரியிடமும், காவல் துறையிலும் புகார் செய்த பிறகும் எந்த நடவடிக்கையும் எடுக்கபபடவில்லையாம்.

### கம்போடியாவில் இடுப்பொடிந்த

## நிக்சனின் வக்கிரம்!

வாசிங்டன், ஆக. 17—

கம்போடியா மீது காட்டுமிராண்டித் தனமாகக் குண்டு வீசி வந்த அமெரிக்க ஏகாதிபததிய வெறியன் நிக்சன் — ஆகஸ்ட் 15-லிருந்து-குண்டு வீசுவதை நிறுத்திக் கொள்வதற்கு வேண்டா வெறுப்பாக—தயக்கத்துடன் ஒப்புக்கொண்டான்.

"இந்தோ-சீனவின் அமைதிக்கு கேடு விளைவிக்கும் முறையில் தாக்குதல் நடவடிக்கையில் வட வியட்நாம் இறங்கினல், அமெரிக்கா தகுந்த நடவடிகை எடுத்துக் கொள்ளும்'' என்று—தான் அமைதியை விரும்புபவர் போல்—கம்போடியாவில் இடுப் பொடிந்து போன அமைதியின்வைரி நிக்சன்கொக்கரித்துள்ளார்

இரத்த ருசி கண்ட ஓநாய் அதைமறக்காது என்பது போல குண்டு வீச்சை நிறுத்தும் நாளான 15-ந் தேதி அன்றுகூட—கடைசியாக ஒரு முறை கம்போடியாவில் அமெரிக்க ஏகாதிபத்திய வெறியர்கள் குண்டு வீச்சு நடத்தினர்.

கம்போடியாவில் குண்டுவீச்சை நிறுத்துவது குறித்து, தான் மிகவும் வருந்தப்படுவதாகவும், இதனல் உலக சமாதானம் பாதிக்கப்படலாம் என்றும் புலம்பியுள்ளார் நிக்சன்.

வியட்நாமிலும் கம்போடியாவிலும் லாவோசிலும் நீசததனமான ஆக்கிரமிப்பு யுத்தம் நடத்தி பல்லாயிரக்கணக்கான மனித உயிர்களை கொன்று குவித்த—உலக அமைதியின் ஒண்ணும் நம்பர் எதிரி என்று அமெரிக்க மக்களாலும் உலகமக்களாலும் காறித்துப்பப்பட்ட நிக்சன்தான், ஒரு அமைதியின் நாயகன்போல நடிக்கிருர்.

கம்போடியாவில் குண்டு வீச்சை நிறுத்துவது பற்றி வருத்தப்படுவதாகவும்,இதனல் உலக அமைதிக்கு ஆபத்து என்றும் நிக்சன் கதைப்பதெல்லாம் விடுதலைக் காகபோராடும் கம்போடிய மக்களின் செங்குருதியைச் சுவைத்தது போதவில்லை என்பதற்கு ஒருமுன்னறிவிப்பு.

கம்போடியா மீது இப்போது குண்டு வீச்சை நிறுத்தினலும்— இனியொருநாள் நிக்சன் மீண்டும் குண்டுவீச்சை தொடரப் போவதற்கான ஒரு முன்னறிவிப்புதான் இது.

ஏகாதிபத்தியத்தின் இடுப்பு முறிந்தாலும் சாகும்வரை அதன் வக்கிரம்— யுத்தவெறி— போகாது.

### அரசுப் போக்குவரத்து பணிமனையில்

## தி. மு. க. சங்கம் கரைகிறது 69 தொழிலாளர்கள் விலகி

### செங்கொடிச் சங்கத்தில் சேர்ந்தனர்

சென்னை, ஆக. 16—

சென்னை அரசுப் போக்குவரத்துப் பணிமலையில் இது வரை தி. மு. க. சங்கத்தில் இருந்து வந்த 69 தொழிலாளர்கள், தற்போது அச்சங்கத்திலிருந்து விலகி செங்கொடிச் சங்கத்தில் சேர்ந்து விட்டனர்.

மேலும் ஏராளமான தொழிலாளர்கள் தி. மு. க. சங்கத்திலிருந்து விலகி செங்கொடிச் சங்கத்தில் சேருவர்என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இவர்களில், 94 பேர்டிரைவர்கள், 10 பேர் கிளினர்கள் இவர் மெக்கானிக்குகள், வெல்டர் மஸ்தூர் டயர் பொருத்துநர், பொருத்துனர். டிங்கர், தச்சர் ஆகியோர் தலா ஒருவர் ஆக மொத்தம் 69 பேர்,

இவர்கள் மெக்கானிக் என். ஜெ. தணிகாசலம், ஓட்டுநர் (டிரைவர்) எம், கமலக்கண்ணன்ஆகியோர் தலைமையில செங்கொடிச் சங்கத்தில் சேர்ந்துள்னர்.

தாங்கள் தி மு க சங்கத்திலிருந்து விலகியது குறித்து கூட்டறிக்கை ஒன்று விடுத்துள்ளனர். அது வருமாறு:—

### தி. மு. க. சங்கம் நடுத்தெருவில் நிறுத்தியது

நமக்கென ஒரே சங்கம் இருந்தது. நாம் பல உரிமைகளைப் பெற்ருேம். நம் மிடையே பிளவுஏற்பட்டது. சங்கம் இரண்டானது.நமது கவுரவமும் பறி போனது! மேலும் பல உரிமைகளும், சலுகைகளும், வசதிகளும் பெறமுடியாமல் போய்விட்டது.

டிரைவர்கள் 17 பேர்கள் அற்பக்காரணத்திற்காக பழிவாங்கப்பட்டுள்ளனர். அரைச்சம்பளம் என்ற பெயரால் மாதம் 10/-15/-ஐப் பெற்றுக்கொண்டு டிரைவர்களின் குடும்பங்கள் இரண்டு மாதங்களாக சிரமப்படுகிறது.

கடந்த இரண்டு மாதங்களாக கஷ்டபபடும் டிரைவர்களின் பிரச்சனைகள் தீர்க்கப்படவில்லை, நாங்கள் நம்பிய தி மு க சங்கம் எங்களை நடுத்தெருவிலே நிறுத்திவிட்டது.

ஒரு டிரைவரை ஒரு அதிகாரி செருப்பால் அடிக்க முனைந்ததை தி மு க தொழிற்சங்கத் தலைவரிடம் தெரிவிததும் ஒரு வித நடவடிக்கையும் அவரால் எடுக்கப்படவில்லை.

இப்படி எத்தனையோ குறைகள் தெரிவிக்கமுடியும் டிரைவர்கள் 17 பேர்களை சஸ்பெண்டு செய்ததுசட்ட விரோதமானது என தெரிந்திருந்தும் நாங்கள் நம்பிய சங்கம நிர்வாகத்தை தட்டிக் கேட்கவில்லை. செங்கொடி சங்கத்தின் ஆலோசனைப்படி மேற்படி சட்ட விரோதமான சஸ்பெண்ட் உத்தரவை ஆட்சேபித்து இப்போது நோட்டீஸ், அனுப்பியுள்ளோம்.

எனவேதான் நமக்கு ஒரே சங்கம், நமது உரிமைகளை பாதுகாக்கும் சங்கம் வேண்டுமென நாங்கள் உணர்ந்தோம். கடந்த காலததில் போட்டி சங்கம் அமைதது தொழிலாளிகள் ஒற்றுமைக்கு விரோதமாக நடந்து கொண்டதை தவருன செயல் எனவும் உணர்ந்து கொண்டோம். இதுவரை தி மு க சங்கத்தில் இருந்ததற்காக வருந்துகிருேம். இப்போது செங்கொடி (சி. ஐ. டி. யூ.) சங்கத்தில் சேர்ந்து விட முடிவு செய்துள்ளோம். எங்கள் வழியை அனைவரும் பின்பற்றி ஒரே சங்கமாக, வலுவான சங்கமாக செங்கொடி சங்கத்தை அங்கீகரிக்க செய்ய அனைவரும் உறுப்பினர்களாக சேரும் படிவேண்டிக்கொள்கிருேம்.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## தென்வியட்நாம் பொம்மை அரசுக்கு

### சிகானுக் எச்சரிக்கை

பீகிங், ஆக 19—

கடந்த ஆக. 15-ந் தேதியிலிருந்து அமெரிக்கக் குண்டு வீச்சு நிறுத்தப்படுவதற்குமுன்பாக, கம்போடியாவுக்குள் தென்வியட்நாம் பொமமை அரசு 10 ஆயிரம் கூலிப் படைகளை அனுப்பியிருப்பதாக கம்போடிய அதிபர் சிகானுக் குற்றம் சாட்டியுள்ளார.

இது சம்பந்தமாக தென் வியட்நாம் பொம்மை அரசைஎச்சரிக்குமாறும்வட வியட்நாம் பிரதம மந்திரி பாம்வான் டாங்கைத் தாம் கேட்டிருப்பதாகவும சிகானுக் அறிவித்தார். தென் வியட்நாம் கூலிப் படைகளுக்கு சி ஐ. ஏ. (அமெரிக்க உளவு ஸ்தாபனம்) பணம் கொடுக்கிறது என்றும் சிகானுக் கூறினர்.

கம்போடியாவில் தலையிடக் கூடாது என்று தென் வியட்நாம் பொம்மை அரசின் அதிபர் தியூவை வட வியட்நாம் பிரமர் எச்சரிப்பார்என்றும், தியூ மீறி நடந்தால் வடவியட்நாமும் தென் வியட்நாம் புரட்சி அரசும் தகுந்த நடவடிக்கை எடுக்கும என்றும் சிகானுக் அறிவித்தார்.

தஞ்சை மாவட்ட

# வி. தொ. ச. மாநாட்டில் பிரதிநிதிகளிடையே அரிகிருஷ்ணக் கோனர்- என். சங்கரய்யா முழக்கம்

**நாகை, ஆக 17—**

**தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்க 9-வது மாநாடு நாகை நகரில் கடந்த 11, 12 தேதிகளில் நடைபெற்றது. இம்மாநாட்டில் மாவட்ட முழுவதிலுமிருந்தும், தாலுகா கமிட்டிகளிலிருந்தும், மாநாட்டிற்கென தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் 161 பேர் கலந்து கொண்டனர். மாநாடு 11-ந் தேதி காலை 11 மணிக்கு துவங்கியது. மாநாட்டுக் கொடியினை தமிழ் மாநில விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் கே ஆர் ஞானசம்பந்தன் ஏற்றிவைத்தார். மாநாட்டிற்கு தோழர் பி எஸ் தனுஷ்கோடி தலைமைவகித்தார்.**

முதலில் பல்வேறு இயக்கங்களில் பங்கு கொண்டு போராடி உயிர்நீத்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

அடுத்து நாகை தாலுகா வி தொ ச தலைவரும், வரவேற்புக் குழு தலைவருமான தோழர் என் சிவராஜ் அனைவரையும் வரவேற்றார். தமிழ் மாநில வி.ச தலைவர் தோழர் கே ஆர் ஞானசம்பந்தன் கொடியேற்றி உரை நிகழ்த்திய பின்பு மாநாட்டினை திறந்து வைத்து தமிழ்நாடு வி.ச நிர்வாகக்குழு உறுப்பினர் தோழர் என் சங்கரய்யா சொற்பொழிவாற்றினர்.

செயலர் தோழர் கோ. வீரய்யன் நடந்து முடிந்த வேலை அறிக்கையினை சமர்ப்பித்த பின்பு, அவ்வறிக்கையின் மீதான விவாதத்தில் 24 பிரதிநிதித் தோழர்கள் பங்கு கொண்டனர். விவாதத்திற்குப்பின் 4, மாவட்டச் செயலர் தோழர் கோ. வீரய்யன் தொகுப்புரை நிகழ்த்தினர். அறிக்கை ஏகமனதாக ஏற்கப்பட்டது வரவு செலவு கணக்கு செயலாளரால் சமர்ப்பிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது.

தோழர் பி எஸ். தனுஷ்கோடி தலைவராகவும், தோழர் கோ வீரய்யன்செயலாளராகவும், மற்றும் 19 தோழர்கள் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர் மாநில மாநாட்டுப் பிரதிநிதிகளாக 77 தோழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாநாட்டில் 23 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாநாட்டினை வாழ்த்தி தஞ்சை மாவட்ட வி தொ ச தலைவர் தோழர், ஏ நடராசன், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொறுப்புச் செயலரும், சி ஐ டி யூ செயலருமான தோழர் கோ பாரதிமோகன். அகில இந்திய வி ச. பொதுச் செயலர் தோழர் அரிகிருஷ்ண கோனர் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். தலைவர் தோழர் பி எஸ் தனுஷ்கோடி தலைமையுரை நிகழ்த்தினர். வரவேற்புக்குழுசெயலர் தோழர் எம் செல்லமுத்து (நாகை வட்ட வி தொ. ச. செயலர்) நன்றி கூற மாநாடு இனிதே முடிந்தது.

# உரிமைகளுக்கான போராட்டம் தொடர்ந்து நடத்துவோம்

— என். சங்கரய்யா

இம்மாநாட்டை துவக்கி வைத்து தோழர் என் சங்கரய்யா பேசும்போது கூறியதாவது "தஞ்சை மாவட்ட வி தொ ச 9-வது மாநாடு நடைபெறும் இவ்வேளையில் நமது இயக்கத்திற்காக 500க்கு மேற்பட்ட தோழர்கள் திருச்சி மத்திய சிறையிலுள்ளார்கள். கீழத்தஞ்சை மாவட்டத்தில் நாம நமது இயக்கத்தினை மேலும் பலமாக கட்டவும், மேலதஞ்சை மாவட்டத்தில் மேலும் விஸ்தரிக்கவும் நாம ஒனறுபட்டு செயல்பட வேணடும், இன்று தஞ்சை மாவட்டததில தஞ்சை மாவட்ட விவசாயத தொழிலாளர் சங்கம் மட்டும் ஓர் உயிருள்ள ஸ்தாபனமாக உள்ளது,

மற்றவர்கள் சதவை மூடிவிட்டார்கள் என்றே தோன்றுகிறது. குறிப்பாக வலது கம்யூனிஸ்ட் கட்சியினர 'மறுமலர்ச்சிமாநாடு' என்ற பெயரால் நடத்தத் தொடங்கி, சட்டமன்றத்தில் கூலி உயர்வு கோரியும் இ மாவட்ட கலெக்டருக்கு முன்பு குறைந்த கூலியை வாங்கியும் வருகிருர்கள்.

இந்த இருதலைப்பட்ச கொள்கைகள்தான் அவர்கள் கதவு மூடுவதற்குக் காரணம நம இயக்கம மட்டுமே உரிமைகளுக்காக நிலததிற்காக போராடக் கூடியது, விவசாயத்தொழிலாளர்களின் ரத்தத்துடன் கலந்துவிட்ட ஸ்தாபனம அதன் விளைவுதான் நமது தோழர்கள் 500 பேர் கைதானதும், சிறையிலிருக்க வேண்டிய நிலையும்.

இப்படிப்பட்ட போராட்ட பாரம்பரியமிகக இயக்கம் இதுதான்

பெருமுதலாளித்துவநாடுகளில் வேலையில்லை உணவு இல்லை, விலை உயர்வு, வறுமை தாண்டவமாடுகிறது. ஆனல் சோஷலிச அமைப்பை உடைய 14 நாடுகளிலே வேலையின்மையோ, விலைவாசி உயர்வோ, வறுமையோ கிடையாது மாருக கல்வி வளர்ச்சி, பொருளாதார விருத்தி, ஜனநாயகஉரிமை சமத்துவம், தன் நிலையில் நின்று உணவு உற்பத்தி பெருக்கம் இப்படிப்பட்ட முன்னேற்றததுடன்— விஞ்ஞான ரீதியான முன்னேற்றத்துடன் வளர்ந்து வருகிருர்கள். இவ்வாருன உலகப்பின்னணிதான் இந்த இயக்கத்திற்கு உள்ளது

சின்னஞ்சிறு வியட்நாமில ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடத்தப்பட்ட போராட்டத்தில கிடைத்த வெற்றியும் நமக்கு அனுபவமாக இருக்கிறது

ஏகாதிபத்திய சார்பை எதிர்க்காமல், பெருமுதலாளித்துவ பாதுகாப்பினை நிறுத்தாமல், மத்திய அரசு எவ்வித பாதுகாப்பும் மக்களுக்கு அளிக்க முடியாது என்றும் நாம், ஆனல் வலது கமயூனிஸ்ட் இயக்கமோ மத்திய அரசு ஒரு முற்போக்கான திசை வழியில் செல்வதாக கூறி இந்திராவின் பின்னலேயே ஓடுகிருர்கள். இன்றைய நிலை என்ன?

அவர்கள் கட்சி ஆளக்கூடிய கேரளத்தில் அச்சுத மேனன் ஆட்சியையே எதிர்த்து போராட வலது கம்யூனிஸ்டுகளே முன் வந்திருப்பதைப் பார்க்கிருேம்.

அதே நேரத்தில் இன்று காங்கிரஸ, ஜனசங்கம், சுதந்திரா, திமுக உள்பட ஒன்று சேர்ந்து விலை உயர்வுக்கு எதிர்ப்பு தெரிவிப்பதாக கூறுகிருர்கள், அது நிச்சயம் நடைபெருது. இந்த நெருக்கடியினை பயன்படுத்தி மீண்டும தாங்களே அதிகாரத்திற்கு வர முயற்சிக்கிருர்கள என்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை,

தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் வளர்ச்சியிலும், மாணவர்-மாதர்-விவசாயிகள் இயக்கங்களின் வளர்ச்சியின் பாலும்தான் ஆளும் வர்க்கத்தின் சவாலை எதிர்க்க முடியும். நம்முடன் வரக் கூடிய பகுதி, தற்காலிகமாக வேறு எந்த முகாமில் இருந்தாலும் அவர்களை நம்பககம் கொண்டுவர பாடுபட வேண்டும்.

மக்கள் ஜனநாயக அணியை உருவாக்குவதற்கான வகையில, அரசியல் உணர்வை வளர்க்கக் கூடிய வகையில் ஜனநாயக சக்திகளை பலப்படுத்துவதும் நம்முன்னுள்ள மகத்தான கடமைகளாகும்.

குறிப்பாக விவசாயத் தொழிலாளர்களிடையே இருந்து வரும படிப்பறிவில்லா குறையை போக்கப் பாடுபட வேண்டும். எனவே, இவ்வாருன இயக்கங்களுக்காக தொடர்ந்து போராடுமாறு கேட்டுக் கொண்டு தமிழ்நாடு விவசாய சங்கத்தின் இதயமாக விளங்கும் தஞ்சை மாவட்ட இயக்கத்தின் இம்மாநாட்டினை மேலும் பல வெற்றிகளை அடைய வாழ்த்துகிறேன்" என கூறி தனது உரையை முடித்தார்.



# மேற்கு வங்கத்தில் அடக்குமுறைகளையும் மீறி விவசாய இயக்கம் வளருகிறது

## அரிகிருஷ்ணக்கோனர் தகவல்

அடுத்து அகில இந்திய விவசாயிகள் சங்கச் செயலர் தோழர் அரிகிருஷ்ணக் கோனர் மாநாட்டை வாழ்த்திப் பேசினர்.

மேற்கு வங்கத்தில் விவசாய இயக்கமும் விவசாய தொழிலாளர் இயக்கமும் மற்ற இடதுசாரி ஜனநாயக இயக்கங்களும மிக்க சிரமங்களுக்கிடையே தமது பணியைச் செய்து வருகின்றன தொழிலாளர் இயக்கமும்— வி ச இயக்கமும பலமாக வளர்ந்து அரசியல் இயக்கமாகவும் வளர்ந்தது. இந்த வளர்ச்சிப் போக்கு ஆளும், வர்க்கத்தினருக்கு பெரும் திகிலை அளித்தது எனவே, அந்தஇயக்கங்கள் மீதுதாக்குதலை தொடர்ந்து நடத்தி வருகிருர்கள் 1967, 1969, 1971 மூன்று தேர்தல்களிலும மேற்கு வங்க கிராம புறங்களில் காங்கிரஸ்கட்சி தோற்றதுக்குக் காரணம விவசாயத் தொழிலாளர்களின் வளர்ச்சிதான்.

1969—70ல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையின் ஐக்கிய முன்னணியின் ஆட்சிக் காலத்தில் 6 லட்சம ஏக்கர் நிலங்களை உபரியாக உள்ள தென்பதை அறிவித்தோம். இவ்வளவு பெருமளவில் உபரி நிலங்களை விவசாயிகள் மேற்கொண்டது இந்தியாவில் மேற்கு வஙகத்தைத் தவிர வேறெங்கும் நிகழவில்லை.

விவசாயத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை மட்டுமல்லாது ஏழை விவசாயிகள், குத்தகைவார சாகுபடிதார்களின பொருளாதார கோரிக்கைகளுக்காகவும்



போராடினேம். இதற்கான சிரமங்களையும பொறுத்துக் கொண்டு விவசாயத் தொழிலாளர்களை ஏழை, குத்தகைவார விவசாயிகளுக்கு ஆதரவாக திரட்டினேம்.

வெறும் பொருளாதார கோரிக்கைகளினுல் மட்டும் நம் பிரச்னை தீராது என விவசாயத் தொழிலாளர்களிடையே சிறு பிரசுரங்கள் பிரச்சாரங்கள் மூலம் விளக்கினேம் அடிப்படையான நிலச் சீர்திருததம் ஏற்பட வேண்டுமாயின் ஒரு மக்கள் ஜனநாயக அமைப்பு வேண்டும், இன்றைய அரசு நீக்கப்பட வேண்டும்; இயக்கத்தை மாநில அளவில் விஸ்தரித்தோம். இதற்காக பெருமுயற்சி எடுத்துக்கொண்டோம் இந்திராவும் அவரது காங்கிரஸ் கட்சியினரும் வெற்றுக் கோஷங்களால் மற்ற மாநிலங்களைப் போலவே மேற்கு வங்கத்தையும் ஏமாற்ற முடியவில்லை. எனவே, அவர்கள மக்கள் மீதும் மக்கள் இயக்கங்களின் மீதும் அடக்குமுறைகளை ஏவினர்கள்.

### இக்கட்டான நிலையில்...

அங்கே அடக்குமுறை என்பது போலீஸ், கைது துப்பாக்கிச் சூடு என்பதோடு நிற்கவில்லை காங்கிரஸ் கட்சியின் சதரபரிஷத் குண்டர்களும், இராணுவமும் சேர்ந்து அரைப்பாசிச அடக்குமுறையை மேற்கொண்டுள்ளனர். நமகட்சித் தலைவர்களையும், உயர்மட்ட ஊழியர்களையும தாக்கினர்கள். நமது விலை மதிப்பிடறகரிய 900 தோழர்கள் வரை கொலலபபட்டார்கள் 20 ஆயிரம் பேர் கைது. பல வருடங்களாக சிறையில். ஆயிரக்கணக்கான தோழர்கள் 3 ஆணடுகளாக விசாரணைக் கைதிகளாகவே இருக்கின்றனர் பலர். இந்நிலையில் தான் நாம் முன்னேறவேண்டியுள்ளது இது சுலபமலல. ஆனல் இந்நிலையிலும ஒரு லட்சம் 2 லட்சம் மக்களைத திரட்டி பேரணி நடத்தியுள்ளோம். 27-7-73ல் ஒரு லட்சம் பேர் கதவடைப்பில ஈடுபட்டனர். இதனை போலீஸ் குண்டர்கள் ஆட்சேபித்து சூறை, தாக்குதல என்று அச்சுறுத்தினர். முடியவலலை. கதவடைப்பு வெற்றிகரமாக நடந்தது

கடந்த ஆண்டை விட இவ்வாண்டு 2,20,000 உறுப்பினர்கள் அதிகமாக விவசாய தொழிலாளர்கள் சேர்ந்துள்ளனா. இன்று 4 லட்சத்திற்கும் மேற்பட்ட உறுப்பினர்களை கொண்ட ஒரு மாபெரும் இயக்கமாக திகழ்கிறது.

பாதுவான்மாவட்டத்தில் நம் தோழர்கள் வெளிப்படையாக செல்ல முடியாது. அத்தகைய நிலையிலும் நாம் உறுப்பினர் சேர்ப்பு இயக்கம நடத்தி வெற்றிபெற்று 53,000 உறுப்பினர்களை சேர்த்துள்ளோம்.

அவர்களை வர்க்க ரீதியாக திரட்ட வேண்டும்.

நாம்நமது அரசியல்பொருளாதாரக் கொள்கைகளை விளக்க வேண்டும் எல்லா போராடும்மக்களின்கோரிக்கைகளுக்காகவும் போராட வேண்டும். அடிப்படைப் பிரச்சினைகளைகோடிக்கணக்கான மக்கள் மத்தியில்கூறி அரசியல் போராட்டத்தை அவர்கள் உணரும்படி செய்ய வேண்டும்.ஸ்தாபன வளர்ச்சியிலும் நாம் அதிக கவனம் செலுத்த வேண்டும். மேற்கு வங்கம் கேரளா போலவே தமிழ்நாட்டிலும் திரட்டி முன்னேற வேண்டும், அந்ததிசை வழிகளில் பேராடி கீழவெண்மணி தியாகிகள் விட்டுச்சென்ற பணிகளை செய்ய வேண்டுமெனக் கூறினர்.

# ஒரு கண்ணில்...

(3.ம் பக்க தொடர்ச்சி)

உயர்விற்கும் இந்த சம்பள உயர்விற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லாமல் இவர்களாக வல்லான் வகுத்ததே சட்டம் என்ற முறையில ஏதோ நிர்ணயம் செய்வார்கள்.

### சம்பள உயர்வு தேவையில்லையாம்

மேலும். இவ்வாண்டு சம்பளம் உயர்வு தேவையில்லை என்று முடிவு செய்து விட்டார்கள், கேட்டால் விலைவாசி உயரவில்லை என்று கூறுகிருர்கள்.

இந்த ஆண்டு ஏற்பட்டிருககும விலைவாசி உயர்வு எவ்வளவு கடுமையானது என்பதும்-இதனல் நாட்டின் தொழிலாளர்களும் விவசாயிகளும் நடுத்தர மக்களும் எவ்வளவுபாதிக்கப்பட்டிருக்கிருர்கள்என்பதும்நாடுமுழுவதும் அவர்கள் நடத்தும் போராட்டங்களில் இருந்தே புரிந்து கொள்ளலாம்

இங்கிலையில் கோவை பொதுப்பணித்துறை மேற்பார்வைப் பொறியாளரும், அவருடைய உதவியாட்களுமான புத்திசாலிகள் விலைவாசி உயரவில்லை, எனவே சம்பள உயர்வுதேவையில்லைஎன்று முடிவு செய்கிருர்கள்.

எப்படிப்பட்ட அறிவாளிகளிடம் இந்த தொழிலாளர்களை ஒப்படைத்திருக்கிருர்கள் என்று தெரிந்து கொள்ள இதை விட வேறு உதாரணம் தேவையில்லை. பேச்சுவார்த்தையில் எவ்வித முடிவும் ஏற்படாததால் 5-7-73 அன்று திட்டமிட்டபடி ஒருநாள் தாண்போராட்டம் நடந்தது. மீண்டும் அரசோ அதிகாரிகளோ பேச்சுவார்த்தை நடத்தி தீர்வுகாண முன் வராததால் தங்கள் தீர்மானப்படி 20—7—73 அன்று பொள்ளாச்சி தலைமை பொறியாளர் அலுவலகம் முன்பு தொழிலாளர்கள் தொடர் உண்ணுவிரதம் மேற்கொண்டனர்.

24—7—73-ம் நாள் இரண்டாம் முறையாக பொள்ளாச்சியில் தொழிலாளர் அதிகாரியின் முன் பேச்சுவார்த்தை நடந்தது. 4-7-73ம் நாள் 'இயலாது,' 'முடியாது' என்று கூறிய கோரிக்கைகளுடன் அரசுதான் கவனிக்க வேண்டும் என்று கூறிய கோரிக்கைகளையும் சேர்த்து அனைத்து கோரிக்கைகளுக்கும பொதுப்பணித்துறை ஜெனரல் சீப் இஞ்சினியர்தான் பேச்சுவார்த்தை நடத்த வேண்டும் என்று கூறினர்கள்.

4-ம் தேதி அரசுதான் கவனிக்க வேண்டும் என்று கூறிய கோரிக்கைகளை 24ம் தேதி சீப் இன்ஜினியர்தான் கவனிகக வேண்டும என்று முன்னுக்குபின் முரணக் கூறியிருககிருர்கள்.

இந்த மாற்றம் ஏன்?

நிர்வாகத்திற்கு இந்த கோரிக்கை சம்மந்தமாக யார் பதில் சொலல வேண்டும என்றே தெரியவில்லையா?

அப்படி தன் கீழ் பணிபுரியும் தொழிலாளர்களின் கோரிக்கைகள் சம்பந்தமாக யார் பேச்சுவார்த்தை நடத்தவேண்டும என்றே தெரியவில்லை என்ருல் இவர்களுக்கு நிர்வாகிகளாக இருக்க என்ன தகுதி இருக்கிறது.

கோரிக்கைகளைபற்றி யார் பேசவேண்டும் என்றே தெரியாதவாகள் தொழிலாளர்களை வேலைநீக்கம் செய்யும உரிமையை மட்டும் எங்கிருந்துதெரிந்துகொண்டார்கள். வேலைநீக்கம்செய்யும் அதிகாரம் இருந்தால் கோரிக்கைகளை தீர்க்கும் அதிகாரம மட்டும் எப்படி இல்லாமல் போகும்?

முதலில் அரசு செய்ய வேண்டும் என்று தட்டிக் கழித்தார்கள். இம்மாதிரி பதில், தொழிலாளர்கள் அரசு என்று தம்பட்டம் கொண்டிருககும் தமிழக அரசை பகிரங்கமாக காட்டிக்கொடுப்பதாகும். என்று இவர்களிடம் அரசு ரகசியமாக கூறியிருக்குமோ என்னவோ? இரண்டாவது பதிலில்—ஜெனரல் சீப இஞ்சினியர் பெயரைச் சொலலி பி. ஏ. பி சீப் இஞ்சினியரும் தமிழக அரசு பொறுப்பில் இருந்து தப்பித்துக்கொள்ளப் பார்க்கிருர்கள்.

தலைவர் கே, ரமணி அடிக்கடி கூறுவதுபோல அம்மி குத்தினுலும், பொம்மி குத்தினுலும் நமக்கு நெல் அரிசியாக வேண்டும் என்று எனவே கோரிக்கைகளை யார் நிறைவேற்றுவது என்பது தொழிலாளர்களின் பிரச்னையல்ல அது சம்பந்தபட்டவர்களின் பிரச்சனை.

எங்கள் கோரிக்கைகளை யார் தீர்த்தாலும் சரி, கோரிக்கைகள் சம்பந்தமாக பேச்சுவார்த்தை மூலம் நியாயமான தீர்வு காண வேண்டும்.

### இதனல் பிரச்னை தீருமா?

இதற்கு பி ஏ பி தலைமைப் பொறியாளர் கைகாட்டி மரம் போல் ஒரு முறை அரசையும் மறுமுறை ஜெனரல் சீப இன்சினியரையும காட்டுவதாலோ— அரசு திருப்ப அதிகாரிகளை காட்டுவதாலோ பிரச்சனைகளை திசை திருப்பவும், காலங்கடத்தவும் முயற்சிப்பதாகும் கோரிக்கைகளுக்கு தீர்வு காண்பதாகாது.

மேலும் ஊழியர் தொழிலாளர்களின் வேலை நீக்கம சம்பந்தமாக — வேலை கொடுக்க தொழிலாளர் அதிகாரி கூறிய முடிவை நிர்வாகம் மறுத்தபின்—பேச்சுவார்த்தை முறிவு அறிக்கை தமிழக அரசு தொழிலாளர் நல இலாகா செயலாளருக்கு அனுப்பப்பட்டது-

பேச்சுவார்த்தை முறிவு அறிக்கை 29—7—72-ல் தொழிலாளர் அதிகாரியால இலாகா செயலாளருக்கு அளிக்கப்பட்டது.

31-7-72 அன்று அறிக்கை பெற்றுக் கொண்டதாக தொழிலாளர் இலாகாசெயலாளரிடம் இருந்து கடிதம் வந்தது

ஆனல்மேற்படி அறிக்கை மீது சட்டப்படி எவ்வித நடவடிக்கையும தொழிலாளர் இலாகாசெயலாளர் எடுக்கவில்லை.

கடலில் போட்ட உப்பு போல மேற்படி அறிககையை கரைதது விட்டார்களா என்று தெரியவில்லை. தொழில தகராறு சட்டப்படியும் — ஒப்புககொண்ட முறைகளுக்கு விரோதமாக தொழிலாளர்கள் பழி வாங்கப்பட்டார்கள் என்று நியாயம கேட்டு தொழிலாளர் இலாகா செயலாளரிடம போனல் இவர்களாவது சட்டததின் சில விதிகளை மீறுபவர்களாக இருக்கிருர்- ஆனல் அவரோ சட்டத்தையே முழுங்குபவராக இருக்கிருர்.

### போராடத் தயார்

தொழிலாளர் அரசின் தொழிலாளர் இலாகாவின் செயலாளர்-மூன்று தொழிலாளர்கள் சட்டவிரோதமாக வேலை நீக்கம் செய்யபபட்ட பிரச்சினையில் பேச்சுவார்த்தை முறிவு அறிக்கை பெற்று ஒரு ஆண்டு காலமாகியும் எதுவும் செய்யவில்லை! தொழிலாளர்கள் நிலைமை எப்படி இருக்கும் என்று பாருங்கள்.

தமிழக அரசின் தொழிலாளர் இலாகா, தொழிலாளர்கள் தற்கொலை செய்து கொள்ளவேண்டும் என்று விரும்புகிறதா?

ஆனல் தொழிலாளர்கள் தற்கொலைசெய்துகொள்ள விரும்பவில்லை என்றுதமிழக அரசு புரிந்து கொள்ள வேண்டும். தொழிலாளர்களை தங்கள் உரிமைகளுக்காக எதிர்த்து போராட தயாராக இருக்கிருர்கள் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

எந்த கோரிக்கையையும் தீர்க்க வேண்டும் என்ற எண்ணமோ பேச்சு வார்த்தை நடத்தி முடிவு காண வேண்டும் என்ற எண்ணமோ அதிகாரிகளுக்கோ அரசிற்கோ இல்லை என்பதை தொழிலாளர்கள் தெளிவாக புரிந்துக்கொண்டபின் தங்கள் கோரிக்கைகளை பெற தொடர்ந்து போராடுவதை தவிர வேறு வழி இல்லை என்ற உறுதியான முடிவுக்கு வந்தார்கள், எனவே 20—7—73-ல் ஆரம்பித்த உண்ணுவிரதத்தை தொடர்ந்து நடததுவது என்று உறுதி கொண்டார்கள்.

24—7—73 அன்று தமிழக சி ஐ டி யூ தலைவர் தோழர் கே. ரமணி போராட்டத்திற்கு நியாயமான தீர்வு காணக்கோரி தமிழகமுதலவருககும் சம்பந்தபபட்ட அதிகாரிகளுக்கும் தந்தி அடித்தார்.

2—8—73 அன்று தலைவர் கே ரமணியும உபதலைவர் வி கே பாலராஜ்யும்சென்னையில் பொதுபபணித்துறை செயலாளரை சந்தித்து மேற்படி கோரிக்கை சமபந்தமாக பேச்சு வார்த்தை நடத்தி தீர்வுகாண கோரினர். அவர் அமைச்சர்களை கலந்து சொல்வதாக கூறினர்.

3—8—73-ல் சந்தித்ததை பற்றியும் எனவே விரைவில் தலையிட்டு சமரசம் காண கோரியும்தலைவர் கே ரமணி பொதுபபணித்துறை செயலாளருக்கு கடிதம் அனுப்பினர்.

உண்ணுவிரதம் இத்தனை நாட்களாக நடைபெற்றும் அரசோ, அதிகாரிகளோ எவ்வித நடவடிக்கையிலும் ஈடுபடவிலலை.

"எனவே பொள்ளாச்சி நகர சி ஐ டி யூ சங்கங்களும், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி மார்க்சிஸ்டு ஆதரவு இயக்கமாக பொள்ளாச்சி தாலுகா அலுவலகம் முன் 16, 17, 18 ஆகிய மூனறு நாட்களிலும் தர்ணபோராட்டம் நடத்தியது.

இந்த கோரிக்கையில் தலையிட்டு தீர்வு காணும்படி தமிழக அரசிடம் இதுவரை செய்த முயற்சிகளை அரசு கவனிக்கவில்லை.

இந்த கோரிக்கைகளுக்கு முடிவு காணும்வரை தொடர்ந்து போராடுவது என்று தொழிலாளர்கள் உறுதி கொண்டுள்ளார்கள்.

ஆகஸ்ட் 28-ல் தமிழகமெங்கும்

# தோல்பதனிடும் தொழிலாளர் போராட்டம்

## சி. ஐ. டி. யூ.—ஏ. ஐ. டி. யூ. சி. அறைகூவல

மத்திய அரசின் தவருன ஏற்றுமதிக் கொள்கையின் விளைவாக, தோல் ஷாப்புகள் மூடப்பட்டு, ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிழந்து வேதனைப்பட்டுள்ளனர். இதை எதிர்த்து — ஆர்ப்பாட்டங்களு பொதுக்கூட்டங்களும் கொண்ட "கோரிக்கை தினம்" நடத்துவதென—16-8-73-ல் திருச்சியில். தமிழக சி ஐ டி. யூ. — ஏ. ஐ டி. யூ சி. சங்கப் பிரதிநிதிகள் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

இது குறித்து சி. ஐ. டி. யூ தமிழ் மாநில உதவிச் செயலாளர் தோழர் ஏ நல்லசிவன், ஏ ஐ டி. யூ. தமிழ் மாநிலச் செயலாளர் ஏ எம். கோபு ஆகியோர் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:

தமிழ்நாடு தோல் பதனிடும் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் 16-8-73ந் தேதி திருச்சியில் நடைபெற்றது, ஏ ஐ டி யூ சி சார்பில் தமிழ் மாநில செயலாளர் தோழர் ஏ. எம். கோபு, எஸ். ராமசாமி திருச்சி வி பட்டுலிங்கம், எம். சந்தனம், எஸ். அழகர், சாமி, சேலம் எம். மொட்டையாண்டி ஆகியோர் கலந்து கொண்டனர். சி ஐ டி யூ சார்பில மாநில துணைச் செயலாளர் தோழர் ஏ நல்லசிவன், எஸ். ஏ. தங்கராஜன் வி. கே. கோதண்டராமன், (வ. ஆ.) ஏ முனுசாமி, (திண்டுக்கல்), எஸ். டி சூசைநாதன் (வட ஆற்காடு) ஜி. ரத்தினம் (பல்லாவரம்) ஆகியோர் கலந்துகொண்டார்கள்.

இன்றுள்ள தோல்பதனிடும் தொழில் நெருக்கடி சம்பந்தமாக விவாதிக்கப்பட்டு, கீழ்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### தீர்மானங்கள்

(1) மீப காலமாக மத்திய அரசு தோல் ஏற்றுமதி வர்த்தகத்தில் அனுஷ்டித்து வரும் நிரந்தரமற்ற கொள்கையின் காரணமாக, கடந்த ஆறு மாத காலத்தில் இந்தத் தொழிலில், என்றுமில்லாத நெருக்கடி வளர்ந்துள்ளது; தொழிலும் இன்று ஸ்தம்பித்து விட்டது மேலும, மத்திய அரசின் கோட்டா முறையால், உற்பத்தியாகும் தோலில் பாதிக்கு மேல் விற்க மார்க்கமின்றி திண்டாடுகின்றனர். இதனுல், தோல் ஷாப்புகள் மூடப்பட்டு உற்பத்தி முடங்கி, பல ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் வேலை இழந்துள்ளனர். எனவே, மத்திய அரசு தோல் வர்த்தகம முழுமையும் மேற்கொண்டு, ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் மூலம நேரடியாக தோல் ஷாப முதலாளிகளிடம் கொள்முதல் செய்யவும், உள்நாட்டு தேவைக்கு மேல் உள்ள உபரி தோல்களை அரசு துறையில ஏற்றுமதி செய்யவும் வேண்டும என்று கோருகிறது.

(2) இந்தியதோல்ஏற்றுமதியாளர்கள் தங்களின் தேச பகதியற்ற போக்கால் தோல் ஷாப்புகளை மூடி, உற்பத்தியை முடக்கி, வேலை இல்லா நிலைமையை உண்டுபண்ணி வருவதை இக்கூட்டம் அரசுக்கவனத்துக்கு கொண்டு வருகிறது.

உடன் மத்திய மாநில அரசுகள் தலையிட்டு, தோல் ஷாப்புகள் மூடப்படுவதைத் தடை செய்யக் கோருவதுடன், வேலை இழந்த தொழிலாளர்களுக்கு மீண்டும் வாழ்வும வேலை இழந்த நாட்களுக்கு ஊதியமும வழங்க வேண்டும என்று கோருகின்றது.

### கோரிக்கை தினம்

(3) மேற்கண்ட தங்களுடைய அவசர கோரிக்கைகளை பொதுமககளின் கவனததுக்கும் அரசின் கவனததுக்கும் கொண்டுவருமபொருட்டுதமிழக்மெங்கும்28—8—73 ஆம் தேதியை கோரிக்கை தினமாக அனுஷ்டித்து ஊர்வல ஆர்ப்பாட்டங்களும் பொதுக்கூட்டங்களும் நடத்துவதென்று இக் கூட்டம தீர்மானிக்கிறது.

### நடக்க இருப்பவை

## சென்னை - செங்கை மாவட்டத்தில இயக்க நிகழ்ச்சிகள்

### தோழர் எஸ்.ஏ. தங்கராஜன்

ஆக 21 வடபழனி-ஜி இ சி தொழிலாளர் ஆதரவு சிஐடியூ பொதுக் - கூட்டம்

,, 23-பேசின்பிரிட்ஜ்- மின்நிலையம் அருகில் கட்சிப் பொதுக்கூட்டம்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதல்சந்து, வடக்கு சித்திரை வீதி மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.